

# அம்ருதா
AMRUDHA

வேள்வி 13 கலசம் 147
Volume 13 Issue 147

அக்டோபர் 2018 ரூ.25
October 2018 Rs. 25

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்
A Monthly Magazine of Art, Literature and Social Criticism

தேவதேவன்
வண்ணநிலவன்
விமலாதித்த மாமல்லன்
சூரங்குடி அ. முத்தானந்தம்
மு. ராஜேந்திரன்
வைதீஸ்வரன்
மண்குதிரை
கருணாகரன்
ராம் முரளி
பொ. கருணாகரமூர்த்தி
ஷங்கர்ராமசுப்ரமணியன்
டிசே தமிழன்
கோ. நாதன்

# காலநிலை மாற்றமும் காத்திருக்கும் சவால்களும்

# அட்சரா வெளியீடுகள்


















































**அட்சரா பதிப்பகம்**

12 கோவிந்த் ராயல் நெஸ்ட் அடுக்ககம், 2ஆவது குறுக்குத் தெரு, சிஐடி நகர் , 3ஆவது பிரதான சாலை
நந்தனம், சென்னை - 600035. தொலைபேசி: 94440 7000,

வேள்வி 13 கலசம் 147



# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

அக்டோபர்-2018 விலை ரூ. 25

கௌரவ ஆசிரியர்
**திலகவதி**

ஆசிரியர்
**பிரபு திலக்**

ஆலோசனைக் குழு
ஓவியம்: **சந்ரு**
மனநலம்: **டாக்டர் மா. திருநாவுக்கரசு**
வரலாறு: **பொ. வேல்சாமி**
மொழிபெயர்ப்பு: **நாகரத்தினம் கிருஷ்ணா**
திரைப்படம்: **விட்டல்ராவ்**
கல்வி: **பேரா. தியாகராஜன்**
அறிவியல்: **பத்ரி சேஷாத்ரி**
இலக்கியம்: **தேவேந்திரபூபதி**
நாடகம்: **அ. ராமசாமி**
ஊடகம்: **இளைய அப்துல்லாஹ்**
சூழலியல்: **மோகன்ராம்**
இசை: **ரவி சுப்பிரமணியம்**
விளையாட்டு: **ஆர். அபிலாஷ்**
தற்கால நிகழ்வுகள்: **செ. சண்முகசுந்தரம்**
அரசியல்: **மருதன்**

வடிவமைப்பு: **பிரபாகரன்**

**அம்ருதா**
**#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ**
**சக்திநகர், போரூர், சென்னை-600116**
தொலைபேசி: -044 - 2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

# காலநிலை மாற்றமும் காத்திருக்கும் சவால்களும்

பிரபு திலக்

கேரளாவில் இருந்து வரும் தகவல்கள் கவலை அளிக்கக்கூடியவையாக இருக்கின்றன. ஆகஸ்ட் மாதம் பேய் மழையாக மாறிய பருவமழை, கருணை காட்டாத வெள்ளம், மூழ்கிப்போன வீடுகள், தீவுகளாக காட்சியளித்த நகரங்கள், சொந்த ஊரில் அகதிகளான மக்கள் என வரலாறு காணாத கனமழையில் தத்தளித்தது கேரளா. கடந்த 100 ஆண்டுகளில் இல்லாத மழை எனச் சொல்லப்பட்டது. செப்டம்பர் மாதம் அப்படியே தலைகீழ் மாற்றம். வாட்டிய வெள்ளம் வடிவதற்கு முன்னரே கேரளாவை வறுத்தெடுக்க ஆரம்பித்துள்ளது வெப்பம். ஒரு மாத இடைவெளியில் அடுத்தடுத்து நிகழ்ந்துள்ள இந்த அபரிமிதமான பருவநிலை மாற்றம் நாட்டையே அதிர்ச்சியில் ஆழ்த்தியுள்ளது.

ஆனால், கேரளாவுக்கு மட்டும்தான் இது புதியது. அதிக மழை, அதிக வெப்பம், அதிக வறட்சி, அதிக குளிர் இவை எல்லாமே ஒரே நேரத்தில் ஒரே இடத்தில் நிகழ்வது உலகம் முழுவதும் ஆங்காங்கே ஏற்பட்டுகொண்டுதான் இருக்கிறது. இந்த ஊழி, பெரும் அழிவை கணிக்க முடியாமல் விஞ்ஞானிகளும் திணறி வருகிறார்கள்.

பொதுவாகவே கேரளா அதிக மழை பெறும் மாநிலங்களில் ஒன்றாகும். ஜூனில் தொடங்கும் தென்மேற்கு பருவமழை செப்டம்பர் வரை நீடிக்கும். பின் அக்டோபரில் தொடங்கும் வடகிழக்கு பருவமழை டிசம்பர் வரை நீடிக்கும். இப்படி வருடத்தில் 7 மாதங்கள் வரை மழை பெய்வதால் கேரளாவில் வறட்சி என்பது மிகவும் அபூர்வமான சம்பவம். அதுவும் இந்த ஆண்டு மழைக் காலத்தில் கேரளாவில் 150 சதவீதத்திற்கும் அதிகமாக மழை கொட்டித் தீர்த்தது.

கேரளாவில் இடுக்கி, வயநாடு, எர்ணாகுளம், திருச்சூர், ஆலப்புழா மற்றும் பத்தனம்திட்டா போன்ற மாவட்டங்களிலுள்ள பெரும்பாலான பகுதிகள் வெள்ளத்தில் மிதந்தன. கேரளாவில் ஓடும் அனைத்து ஆறுகளும் அபாயகட்டத்தை தாண்டி வெள்ளப்பெருக்குடன் பாய்ந்தன. கேரளாவின் பெரிய அணையான இடுக்கி வரலாற்றில் முதல்முறையாக 5 மதகுகளும் திறக்கப்பட்டன. இதனால் ஏற்பட்ட வெள்ளப்பெருக்கின் சுவடு மறைவதற்குள், நம்ப முடியாத ஆச்சர்யமாக கேரளாவை கடுமையான வெப்பம் வாட்டுகிறது. இதனால் நீர்நிலைகள் வேகமாக வறண்டு வருகின்றன. இடுக்கியின் நீர்மட்டம் மட்டும் இருபது அடி குறைந்துள்ளது. மற்ற அணைகளிலும் இதே சூழல்தான் என்று அங்கிருந்து வரும் தகவல்கள் தெரிவிக்கின்றன.

கேரளாவில் கோடை காலத்தில்கூட எதாவது ஒரு இடத்தில் மழை மொழியும். ஆனால், கடந்த கனமழைக்குப் பிறகு ஒரு பகுதியில்கூட மழை பெய்யவில்லை என்பது கூடுதல் அதிர்ச்சியை ஏற்படுத்தியுள்ளது. எதிர்மாறாக, கோடையை மிஞ்சும் வகையில் வெயில் வறுத்தெடுக்கிறது. கேரளாவின் இந்த திடீர் பருவநிலை மாற்றம் குறித்து மத்திய நீர் ஆதார ஆராய்ச்சி மேலாண்மை மையத்தின் வல்லுநர்கள் ஆய்வு செய்து வருகின்றனர்.

“பிரகிருதி திருச்சடிக்கும்” (இயற்கை திருப்பியடிக்கும்) என்ற பிரபல மலையாள கவிஞரும் சூழலியலாளருமான சுகதாகுமாரியின் வார்த்தைகள்தான் ஞாபகம் வருகிறது. 1980-களில் கேரளாவின் முக்கிய காடான அமைதி பள்ளத்தாக்கில் புனல்மின் நிலையம் அமைப்பதற்கு எதிராக சுகதாகுமாரி எழுதிய ‘மரத்தின் சுதுதி’ என்ற கவிதை போரட்ட கீதமாக உருவெடுத்தது குறிப்பிடத்தக்கது. கடந்த ஐம்பது ஆண்டுகாலமாக கவிதைகள் வாயிலாகவும், அறப் போரட்டங்கள் வாயிலாகவும் சுற்றுச்சூழல் பிரச்சினைகளை தீவிரமாக பேசிவரும் சுகதகுமாரி, பிபிசி ஊடகத்துக்கு அளித்துள்ள பேட்டியில் இவ்வாறு தெரிவித்துள்ளார்:

“இந்தியாவின் தென்பகுதியில் உள்ள இந்த சிறிய மாநிலம் மீண்டும் பழைய நிலைக்கு திரும்பாது. கேரளாவில் உள்ள ஒவ்வொரு ஆறும் மலையும் நாசமாகிவிட்டபின் இந்த நாடு எப்படி கடவுளின் சொந்த நாடாக இருக்கும்? எச்சரிக்கைகளை மீறி இடுக்கியில் மலைகள் மீது பெரிய வீடுகள், கேளிக்கை விடுதிகள் கட்டப்பட்டன. தற்போது மலையின் ஒரு பகுதியே நிலச்சரிவில் அழிந்துவிட்டது. 44 நதிகள் இங்குள்ளன. பல நதிகள் ஆலைக்கழிவு, வீட்டுக்கழிவுகளை சுமந்து, நோய்வாய்ப்பட்டுப்போனது. முடிந்தமட்டும் மணலை தோண்டி நதிகளின் ரத்தநாளங்களை துண்டித்தாகிவிட்டது. இயற்கையின் சமநிலையை குலைத்துவிட்டதால் இப்போது நாம் நிலைகுலைந்து நிற்கிறோம்.

இயற்கை நமக்கு உயிர்கொடுத்தாள். அவள் அன்னை. ஆனால், தொடர்ந்து நாம் சுயநலம் மிக்கவர்களாக, அவளுக்கு ஆலைக்கழிவுகளைக் கொண்டு நஞ்சூட்டி, நதிகளை பாழ்படுத்தி, அவளது உடலை துண்டாடி நாசப்படுத்தும்போது அவள் மகாகாளியாக மாறி நம் உயிரை எடுத்துச்செல்கிறாள். வெள்ளம் வரும்போது சதுப்புநிலக்காடுகள் மற்றும் நெல்வயல்கள் மட்டுமே அந்த நீரை உள்வாங்கிக்கொள்ளும் திறன் கொண்டவை. தற்போது அந்த நிலங்களில் வீடுகளும், வெளிநாட்டு நிறுவனங்களின் கட்டிடங்கள், ஷாப்பிங் மால்கள், எஸ்டேட்களும் அமைத்துவிட்டதால்,

இயற்கை பாழானது. நிலப்பகுதிகள் பெரும்பாலும் நகரங்களாக மாறிவிட்டதால், இதுவரை பாய்ந்துவந்த நதியின் தடங்களில் ஆக்கிரமிப்புகள் அதிகரித்தன. குறைந்தபட்சம் வெள்ள நீர் வடிவதற்காவது நாம் இடம் அளித்திருக்கவேண்டும்.

கேரளா தற்போது சந்தித்துள்ள பேரிடரில் இருந்து மீண்டு வந்தாலும், இயற்கையை பாதுகாக்க மறந்தால் மீண்டும் இதுபோன்ற நிகழ்வுகளை தொடர்ந்து சந்தித்துக்கொண்டே இருக்கும்" என்று கூறியுள்ளார் சுகதகுமாரி.

சுகதகுமாரியின் இந்த எச்சரிக்கை கேரளாவுக்கு மட்டுமல்ல, நமக்கும்தான். கேரளா வெள்ளம், சென்னை வெள்ளம் இவை இரண்டுக்கும் அடிப்படைக் காரணம், புவிவெப்பமயமாதல்தான். இதனால்தான் இதுபோன்ற அடுத்தடுத்த பருவநிலை மாற்றங்கள் உருவாகிறது. கேரளா மட்டுமல்ல ஐரோப்பிய நாடுகள், ஆஸ்திரேலியாவிலும்கூட இப்போது கடும் வெப்பம் நிலவுகிறது. முன்பெல்லாம் ஆண்டுக்கொருமுறை பருவநிலையில் மாற்றங்கள் வரும். ஆனால், இப்போது ஒவ்வொரு மாதமும் பல பருவநிலை மாற்றங்கள் நிகழ்கிறது. இது எதுவுமே முன்னே கணிக்கக்கூடிய வகையில் இல்லை.

பருவநிலையில் இவ்வளவு மாற்றங்கள் உருவாகியும்கூட அதனை எதிர்கொள்ளும் வகையில் நாம் எந்த திட்டமிடுதலையும் செய்வதில்லை என்பதுதான் இன்னும் அவலம். சென்னையில் வெள்ளநீர் வடியும் பாதைகளில் கட்டிடங்கள் கட்டுவது சென்னை வெள்ளத்திற்கு பிறகும் தொடரத்தான் செய்கிறது. மேற்கு தொடர்ச்சி மலை முழுவதும் சூழலை பாதிக்கும் வகையான கட்டுமானங்களை அதிகமாக உருவாக்கியுள்ளோம். இயற்கைக்கு எதிரான வளர்ச்சியை நோக்கியே நாம் பயணிக்கிறோம். அதன் விளைவுகளையே இப்போது அனுபவிக்கிறோம்.

கேரள வெள்ளத்திற்கு காரணம் மேற்கு தொடர்ச்சிமலைகளின் சூறையாடல் மற்றும் நீர்வழித் தடங்களில் கட்டப்பட்ட கட்டிடங்கள்தான் என்பது இன்று அனைவரும் ஏற்றுக்கொண்ட ஒன்றாகிவிட்டது. ஆனால், இந்த எச்சரிக்கை 2011ஆம் ஆண்டே விடுக்கப்பட்டது. அப்போது அலட்சியப்படுத்தப்பட்டது.

பாரம்பரியமான மேற்குத்தொடர்ச்சி மலைத் தொடரைப் பாதுகாக்க, மத்திய சுற்றுச்சூழல் அமைச்சகம், மாதவ் காட்கில் தலைமையில் 14 பேர் கொண்ட நிபுணர் குழுவை அமைத்தது. இந்தக் குழு 2011-இல் தனது அறிக்கையினை மத்திய அரசிடம் சமர்ப்பித்தது.

அறிக்கையில் 140,000 கி.மீ. பரப்பளவு கொண்ட மேற்குத்தொடர்ச்சி மலைத் தொடரை மூன்று பகுதிகளாகப் பிரித்து பாதுகாக்க வேண்டும்; இப்பகுதியில் கட்டிடங்கள் எதையும் புதிதாக உருவாக்கக் கூடாது; மலைக்கிராம மக்களின் குடியிருப்புக்கு நிலம் வழங்குவது தவிர, புதிதாக விவசாயம் சாராத செயல்பாடுகளுக்காக நிலங்களைப் பயன்படுத்துவதைத் தடுக்க வேண்டும்; மலைப்பகுதியில் ரசாயன உரங்கள், பூச்சிக்கொல்லிகள், வெளிநாட்டு மரங்கள் வளர்ப்பு ஆகியவற்றுக்கு தடைவிதித்து, பாரம்பரியமான இயற்கை விவசாய முறையை பின்பற்ற வேண்டும்; வளர்ச்சித் திட்டங்கள் என்ற பெயரிலான அணைத் திட்டங்கள், ரயில் வழித்தட அமைப்பு பணிகள், சுரங்கப் பணிகளைக் கட்டுக்குள் கொண்டுவர வேண்டும் உள்ளிட்ட பல்வேறு பாதுகாப்பு அம்சங்களை மாதவ் காட்கில் குழு பரிந்துரைத்தது. ஆனால், மாதவ் காட்கிலின் அறிக்கையை ஏற்க மறுத்தது முந்தைய கேரள அரசு.

இதனையடுத்து கஸ்தூரிரங்கன் தலைமையில் மீண்டும் ஒரு குழு அமைக்கப்பட்டு ஆய்வு செய்யப்பட்டது. அவர் தலைமையிலான குழு, மேற்கு தொடர்ச்சி மலைப்பகுதியின், 60 ஆயிரம் சதுர கி.மீட்டர் பகுதியை, சுற்றுச்சூழல் முக்கியத்துவம் வாய்ந்ததாக அறிவிக்க பரிந்துரைத்தது. இதற்கு கேரளா, தமிழகம், கர்நாடகா உள்ளிட்ட மாநில அரசுகள் ஆட்சேபனை தெரிவித்ததால் கஸ்தூரிரங்கனின் அறிக்கையும் கிடப்பில் போடப்பட்டது.

மாதவ் காட்கில், கஸ்தூரிரங்கன் அறிக்கையைச் செயல்படுத்தி இருந்தால், தற்போது இந்தளவிற்கு கேரளா பேரழிவை சந்தித்திருக்காது என்கிறார்கள் சுற்றுச்சூழல் ஆர்வலர்கள்.

"கேரளாவில் வயநாடு, குட்டநாடு மலைப்பகுதிகளில் அதிக அளவிலான கல்குவாரிகள் உள்ளன. இங்கிருந்து 75 லட்சம் டன் கல் எடுக்கப்பட்டு விழிஞம் துறைமுகத்தில் மூன்று கிலோமீட்டருக்கு கடலில் கப்பல் நிறுத்தும் தளத்திற்காக போடப்படுகிறது. இதுபோன்று மலைகளை அதிகம் உடைப்பதால் சூழல் பாதிக்கும். அரசு இதனையெல்லாம் உணரவேண்டும். சூழலை பாதிக்காத வளர்ச்சிக்கு திட்டமிடவேண்டும்.

இதுபோல் கடும் மழை, கடும் வெப்பம் என அடுத்தடுத்து கேரளாவில் நிகழ்ந்துள்ள காலநிலை மாற்றங்களை பற்றி ஆய்வு செய்வதும் இப்போதைய உடனடி தேவை. காலநிலை மாற்றத்தை எப்படி எதிர்கொள்வது என்பது பற்றிய செயல்திட்டத்தையும் வகுக்கவேண்டும். பொதுவாகவே முன்பெல்லாம் பகலில் எவ்வளவு வெயில் அடித்தாலும் இரவில் புவி இயல்பான வெப்பநிலைக்கு வந்துவிடும். ஆனால், இப்போது படிப்படியாக இரவு வெப்பத்தின் அளவும் அதிகமாகி விட்டது. பகலில் பூமிக்கு எவ்வளவு வெப்பம் வந்தாலும் அது இரவில் வளிமண்டலத்திற்கு திரும்பிவிடும். ஆனால், இப்போது வளிமண்டலத்திற்கு திரும்பும் பாதையை கார்பன் டை ஆக்சைடு அடைத்துக்கொண்டு இருப்பதால் புவிக்கு வந்த வெப்பம் திரும்ப முடியாமல் இங்கேயே தங்கி இரவும் வெப்பம் அதிகமாகவே உள்ளது. இதுபோன்ற மாற்றங்களைப் பற்றி பல ஆய்வுகளை நடத்தினால் மட்டுமே சூழலையும் உலகையும் காக்கலாம்" என்கிறார்கள் சூழலியலாளர்கள்.

சூழல் சிறப்பாக இருந்தால் மட்டுமே வேறு எந்த வளர்ச்சியும் நிகழும். சூழலை அழித்து உருவாக்கும் வளர்ச்சியை இயற்கை ஒரே நாளில் சிதைத்துவிடும். பின்னர் வாழ்நாள் முழுவதும் அதனை நாம் உருவாக்க பாடுபட வேண்டும். கேரளா வெள்ளத்தால் 40 ஆயிரம் கோடிக்கு இழப்பு ஏற்பட்டுள்ளதை மறந்துவிடக்கூடாது. ●

# புனைவு என்னும் புதிர்

## ஷோபாசக்தி சிறுகதைகள்
## எம்.ஜி.ஆர் கொலை வழக்கு, காணாமற்போனவர்

விமலாதித்த மாமல்லன்

### எம்.ஜி.ஆர் கொலை வழக்கு

இந்தச் சிறுகதை என்ன சொல்ல வருகிறது என்பதை ஒரு வரியில் சொல்லிவிடலாம். ஆனால், அதை அப்படிச் சொல்லிவிடுவது நியாயமில்லை. ஒரு வரியில் ஒரு கட்டுரையை எழுதுவதோ வெளியிடுவதோ யாருமே செய்திராத புதுமையாக இருக்கும் என்றாலும், பொது அறிவுள்ள யாருக்குமே அது கட்டுரை என்று ஏற்கக்கூடியதாக இருக்காது.

இப்படித்தான் இந்தக் கதையில் எம்.ஜி.ஆர். கொல்லப்பட்டதற்காகச் சொல்லப்பட்டிருக்கிற காரணமும் அபத்தமாக அமைந்திருக்கிறது. இவ்வளவு அபத்தமான காரணத்திற்காகவெல்லாம் எப்படி இயக்கங்களின் பெயரால் மனித உயிர்கள் எடுக்கப்பட்டுக் கொண்டிருந்தன என்பதை நம் முகத்தில் அறையும்படிச் சொல்வதற்காகத்தான் இந்தக் கதையே எழுதப்பட்டிருக்கிறது. குறிப்பாக இப்படி எழுதப்பட்டிருக்கிறது.



கிருபானந்த வாரியாரின் கதாகாலட்சேபத்தை, பாண்டிச்சேரியில் ஆறு ஏழாம் வகுப்பு படிக்கையில் துரத்தித் துரத்திக் கேட்டிருக்கிறேன். பத்தாம் வகுப்புப் படிக்கையில், பழைய காங்கிரஸ்காரரும் நாத்திகருமான எங்கள் பள்ளித் தமிழாசிரியர் இரா. சுப்பிரமணியன் என்கிற திருமுருகன் அவர்கள் புதுச்சேரி கம்பன் கழகத்தின் வெளியிலிருந்த பெஞ்சில் ஒரு காலை மடக்கியபடி உட்கார்ந்து சொன்னது இடிபோல் தாக்கிற்று.

“வாரியார் சொல்ற கதையை சின்னப்பசங்களும் பொம்பளைங்களும் கேட்கலாம். வளந்த ஆளுக்குக் கொஞ்சம் புத்தியிருந்தாலும் கேட்கமுடியுமா?” என்றார். அதற்கடுத்த முறை வாரியாரைக் கேட்கும்போது இந்த வார்த்தைகள் விடாது என் மூளைக்குள் இடிக்கத் தொடங்கியதால், அவர் சொல்லும் கதையை, அதற்குள் வரும் வாய்விட்டுச் சிரிக்கவைக்கிற குட்டிக் கதைகளை பழைய சுவாரசியத்துடன் கேட்கமுடியாமல் போயிற்று.

இது நிகழ்ந்து இரண்டு மூன்று ஆண்டுகளில் கொஞ்சம் வளர்ந்தபின் கல்கி, சாண்டில்யனை விட்டு, தமிழின் நவீன இலக்கியம் அறிமுகமானபோது திருமுருகன் சார் எழுதிக்கொண்டிருந்தவை கவிதைகளல்ல செய்யுள் என்பது புரியத் தொடங்கியபோது, வாரியார் படு திறமையான கதை சொல்லி என்பது புரிந்தது.

கதையைத் தொடங்கிய கொஞ்ச நேரத்தில், வாரியார் சுவாமிகள் இன்னொரு கதை சொல்லத் தொடங்குவார். அதிலிருந்து வேறொன்றுக்குத் தாவுவார். கிளை விட்டுக் கிளை, கிளைக்கதைக்குக் கிளைக்கதை என்று தாவிக்கொண்டே இருப்பார். ஒன்றிலிருந்து பிறிதொன்றுக்கு எங்கே போனார் எப்போது போனார் என்கிற மாயம் எப்படி நிகழ்ந்ததென்று அவ்வளவு எளிதில் பிடிபடாது. கதை கேட்டுக்கொண்டிருக்கையில் இடையில் தூங்கிவிட்டோமோ என நம் மீதே ஐயம் வரும்படி எங்கெங்கோ சஞ்சரித்து, அவருக்கு ஒதுக்கப்பட்ட நேரம் முடியும்போது, இப்படியாகத்தான் என்று ஓரிருவரிகள் சொல்லி சரட்டென தொடங்கிய இடத்திற்கு வந்து சேர்ந்து இதை அதனுடன் கச்சிதமாகக் கோர்த்துவிட்டு, அப்பமொடவல்பொரி... என்று மங்களம் பாடிக் கதையை முடித்துவிடுவார்.

ஏழெட்டுக் கதைகளைப் படித்தபின் ஷோபாசக்தியின் கதை சொல்லும் பாணி ரொம்பப் பரிச்சயப் பட்டதாக இருக்கிறதே என இடித்துக்கொண்டே இருந்தது. அடடா இது வாரியாருடைய டெக்னிக் அல்லவா என்று இப்போதுதான் உறைத்தது. உடனே இதைத் தட்டச்சத் தொடங்கிவிட்டேன்.

வாரியாருக்கும் ஷோபாவுக்கும் இருக்கிற ஒரே வேறுபாடு, முன்னவர் புராணங்களில் இருப்பவற்றின் அருமை பெருமைகளையும் நுட்ப நுணுக்கங்களையும் காரண காரியங்களையும் எல்லோரும் வியந்து ரசிக்கும்படி சிரிக்கச் சிரிக்கச் சொல்லி அப்படியே வைத்து போஷிப்பவர்; ஷோபா, எளிமையான அல்லப்பிட்டி கிராமத்து வாழ்வின் தருணங்களைக் கண்கூடாகக் கண்டு வியந்து ரசிக்கும்படிச் சிரிக்கச் சிரிக்கச் சொல்லிக்கொண்டே சென்று, இறுதியில் அனைத்தையும் கலைத்துப் போடுபவர். கதையை முடிக்கையில் இருவருமே, தொடங்கிய இடத்துடன் சரட்டென ஒரே வாக்கியத்தில் கொண்டுபோய் இணைத்து முடிப்பவர்கள்தாம். ஒரே வேறுபாடு, வாரியாரிடம் வியப்பும் சிரிப்பும் மிஞ்சும். ஷோபாவிடம் சோகமும் சிந்தனையும் கிளம்பும். எனவேதான், வாரியார் கேளிக்கையளராக எஞ்சி விடுகிறார்; ஷோபாசக்தி கலைஞனாக விஞ்சி நிற்கிறார்.

“கேளுங்கள் பௌசர்!” என்று தொடங்குகிறது கதை. முதல் பிளாஷ்பேக்கில் நிகழ்காலத்தில் சற்றே பின்னால் போகிற கதையின் இரண்டாம் பகுதி, பழைய கதையைச் சொல்கிறேன் கேளுங்கள்



பௌசர்! என்று எழுத்தாளனான கதை சொல்லியின் பிள்ளைப் பருவத்திற்குச் செல்கிறது. பௌசர் என்பவர் கதைகளை வெளியிடும் பத்திரிகை ஆசிரியர் என்று கதையின் முதல் பத்தியின் மூலம் தெரிகிறது. ஆனால், அவர் யார் எவரென்று கதையில் சொல்லப்படவில்லை.

கதையின் முதல் காட்சி, ஒரு பொடியனை ஆறேழு பொடியன்கள் சேர்ந்து அடித்துக் களைவதாக இருக்கிறது. ஊரில், இயக்கத்தின் பேரில் நடந்த பல கொலைகளுக்கு, டொனாஸ் என்கிற பொடியன் நேரடியாகவோ மறைமுகமாகவோ காரணமாக இருந்ததைப் பற்றிய மற்றவர்களின் விசாரணை சொல்லப்படுகிறது. அவன் எல்லாவற்றையும் மறுக்கிறான். ஆனால், எம்ஜிஆரைக் கொலை செய்தது மட்டும் தான்தான் என ஒப்புக்கொள்கிறான். ஆனால், அவர்களுக்கு வந்தத் தகவலோ எம்ஜிஆர் தற்கொலை செய்துகொண்டு தூக்கில் தொங்கியதாக இருந்ததால் அவர்கள் அதிர்ச்சியடைகிறார்கள்.

இந்தக் கதையை அப்படியே அந்தரத்தில் விட்டுவிட்டு, கதையின் இரண்டாம் பாகம் கதைசொல்லியின் ஊருக்குப் போய், அந்தக் கிராமமும் சுற்று வட்டாரமும் அடுத்திருக்கும் சிற்றூர்களும் எப்படி எம்ஜிஆரின் தீவிர விசிறியாக இருந்தன என்பதை சீரியஸா பகடியா என்று பிரித்தறிய முடியாத கலவையில் சொல்லிச் செல்கிறது. வருடங்கள் நகர்ந்து சிறுவர்கள் வளர, இலங்கைத் தமிழர்களின் போராட்டம், ஈழத்திற்கான போராகி உக்கிரம் பெற்று கிராமத்துக்குள் இயக்கம் நுழைகிறது.

இயக்கம் என்றவுடன் ஈழ ஆதரவு இலங்கை இந்திய வாசகர்கள், இது ஷோபாசக்தியின் இன்னொரு புலி எதிர்ப்பு என்று எண்ணி எதிர்மறை மனநிலைக்குப் போய்விடுகின்றனர். ஆனால், கதை அதற்கு எதிர் நிலையில் இருக்கிறது. சார்பெடுக்காத வாசகனுக்கு, ஷோபா எல்லா இயக்கங்களின் அத்துமீறல்களுக்கும் எதிரான நிலையில் நின்றே விமர்சிக்கிறார் என்பது புலப்படும்.

கதையின் இரண்டாவது பகுதியில் எம்ஜிஆரின் மவுசு திகட்டுமளவுக்குத் தரப்படுவதும், கதைசொல்லி தீவிர எம்ஜிஆர் விசிறியாக இருப்பதும், அந்தக் கிராமத்திலேயே எம்ஜிஆரின் நகலாக ஒருவர் உருவாவதும், அது விலாவாரியாகச் சொல்லிச் செல்லப்படுவதும், கதையின் இறுதியை நோக்கியே என்பது சிரிக்கச் சிரிக்க வாசித்துக் கொண்டிருக்கும் வாசகனுக்குக் கிஞ்சித்தும் தோன்றாத அளவுக்குச்

சொல்லிக்கொண்டு செல்வதில்தான் இருக்கிறது ஷோபா என்கிற கதை சொல்லியின் வாரியார் திறமை.

எல்லோரிடமும் அன்பாகப் பழகுகிற, எம்ஜிஆரே எல்லாம் என்று எம்ஜிஆர் போலவே தொப்பியணிந்து கருப்புக் கண்ணாடி அணிந்து வாழ்ந்துகொண்டிருந்த ஒரு பாவமும் அறியாத அந்த ஈழத்து எம்ஜிஆர், தூக்குப்போட்டுக்கொண்டு செத்துப்போனதாக அதுவரை அறியப்பட்டிருந்ததைக் கலைத்துப்போடுகிறது, பிரான்ஸில் கதை சொல்லியின் விசாரணைக்கு உட்பட்டிருக்கும் டொனாஸ், தான்தான் அந்த எம்ஜிஆரைக் கொன்றதாகச் சொல்வது. என்ன காரணத்துக்காக அவன் எம்ஜிஆரைக் கொன்றான் என்பதைக் கதை சொல்லியிடம் கூறுகிறான் டொனாஸ்.

இந்தப் பகுதியை இந்திய வாசகன் ஒருமுறைக்கு இருமுறை கூர்ந்து படிப்பது அவசியம்.

அதற்கடுத்த பத்தி,

*நம்ப முடிகிறதா பௌசர்? அந்தக் கொலைக்கு அவன் சொல்லும் காரணத்தை உங்களால் நம்பமுடிகிறதா?*

என்று தொடங்குகிறது.

அதிரடி விசாரணை செய்துகொண்டிருந்த பொடியளுக்கு, இயக்கங்களைப் போலல்லாது கோபம் அன்றோடு வடிந்துவிடுகிறது. இது சொற்களில் சொல்லப்படுவதில்லை. வாசகன் உணரும்படி எழுதப்பட்டிருக்கிறது. படிப்பவனுக்குச் சிந்திக்கும் சிரமம் கொடுக்காமல், முற்போக்கு எழுத்தாளர்கள் எல்லாவற்றையும் மிச்சம் மீதி வைக்காமல் எழுதிவைத்து விடுவதைப்போல, வாரியார், கேட்பவனுக்கு யோசிக்கும் கஷ்டமே கொடுக்கமாட்டார். அடித்துக்கொண்டிருந்த பொடியன்கள் சொந்த ஜோலியைப் பார்க்கவேண்டி இருந்ததில் இரவே டொனாஸை அவர்கள் விட்டுவிட்டனர் என்று எழுதிப்போட்டுப் போயிருப்பார் எழுத்தாளர். சின்ன தவறு செய்தவனையும் இயக்கம் எப்படி தண்டிக்கும். நிறையபேரைக் கொலைசெய்திருக்கிறான் என்று அடித்துக்கொண்டிருந்த அவனது வயதொத்த பையன்கள் குரோதமின்றி எப்படி நடத்துகின்றனர் என்கிற முரணை வாங்கிக்கொள்ள வேண்டியது, ஷோபாசக்தியிடம், வாரியாரின் வேலையாக இல்லாது வாசகனின் காரியமாகிவிடுகிறது.

ஏழெட்டுக் கதைகள் படித்த அனுபவத்திலேயே, எதையுமே பொருளற்று வைக்க மாட்டாரே ஷோபாசக்தி என்று இணையத்தில் தேடிப் பார்த்ததில்தான், பௌசர் என்பது முஸ்லீம் பெயர் என்பதே எனக்குத் தெரியவந்தது. எல்லோரும் இவ்வளவு மெனக்கெட வேண்டியதில்லை. ஆனால், இந்த உபரித் தகவலும் தெரிகிறபோது, கதையின் இறுதியுடன் இதைக் கோர்த்தும் பார்க்கக்கூடிய வாசகனுக்கு இலங்கையின் இயக்கங்களின் வரலாற்றில், சிங்கள ராணுவத்தால் மட்டுமின்றி எப்படியெல்லாம் எதற்காகவெல்லாம் இயக்கங்களின் கைகளிலும் அந்த மக்கள் சிக்கிச் சின்னாபின்னப்பட்டார்கள் என்கிற இன்னொரு பரிமாணமும் கிடைக்கக்கூடும்.

**காணாமற்போனவர்**

சுஜாதா ஏன் சுவாரசியக் குப்பை, ஷோபாசக்தி ஏன் கலைஞன் எனத் தெரியவேண்டுமென்றால் நீங்கள் கட்டாயம் படிக்கவேண்டிய கதை ‘கண்டி வீரன்’ தொகுப்பிலிருக்கும் ‘காணாமற்போனவர்’.

பொழுதுபோக்குக் கதைகள் சுவாரஸியத்துக்கான எதிர்பாராத திடீர் திருப்பங்களைக் கொண்டவை. இதற்காக இலக்கிய கதைகளில் இவை இருக்கக்கூடாதென்றில்லை. இவற்றில் இருக்கும் திருப்பங்கள் வெறும் சுவாரசியத்தைத் தாண்டி வேறொரு விஷயத்தைச் சொல்ல வருபவை. இரண்டும் அடிப்படையில் எப்படி வேறுவேறானவையோ அப்படியே இதிலும் வேறுபடுகின்றன.

திருப்பங்களை வாசகன் எதிர்பாரா வகையில் உண்டாக்குவதில் ஆகிவந்த உத்திகளில் ஒன்று, அவனது கவனத்தை வேறிடத்திற்குத் திருப்பிவிடுவது.

*எனக்கு எதிரே உட்கார்ந்திருந்த அந்த மனிதர், நான் தேடிக்கொண்டிருந்த பாவெல் தோழரைக் கொல்வதற்குத் தானே உத்தரவிட்டதாகச் சொல்லிவிட்டு, ஒரு கோணல் சிரிப்புடன், பாதி நரைத்துப்போன அவரது மீசையில் படிந்திருந்த ‘பியர்’ நுரையை அழுத்தித் துடைத்துக்கொண்டார்.*

என்று கதையை ஆரம்பித்துவிட்டு, அடுத்த பத்தியிலேயே,

*இந்தக் கதை இப்படித்தான் ஆரம்பித்தது. சென்ற கோடை காலத்தில் எனது அப்பா சென்னையில் இறந்துபோனார்...*

என்று, வேறிடத்துக்குத் தாவிவிடுகிறது. ஆனால், இதுபோல், முதல் பத்தி ஒன்றாகவும் இரண்டாவது பத்தி வேறொன்றாகவும் இருப்பது ஷோபாசக்தியின் நிறைய கதைகளில் காணக்கிடைப்பதுதான்.

*நான் ஜன்னலுக்கு அருகே நின்று கொண்டு தலை வாரிக் கொண்டிருந்தேன். தெருவில் ஒருவன் நடந்து போய் கொண்டிருந்தான். அவனுக்கு தலையே இல்லை.*

*இது முதல் பேரா.*

*அடுத்த பேராவில், "அவன் தலையில் ஒரு பானையை கவிழ்த்து கொண்டு போய் கொண்டிருந்தான்" என்று எழுது, அல்லது, "அவன் தலை வெட்டப்பட்டு விட்டது. முண்டம் மட்டும் நடந்து போய் சுருண்டு விழுந்தது" என்று எழுது. முதல் வகை நகைச்சுவை கதை. இரண்டாவது துப்பறியும் கதை. வேறு ஏதாவது விதமாகவும்கூட இதை எழுதலாம். ஆனால், முதல் பேராவில், முதல் வாக்கியத்தில் கதை ஆரம்பித்து விட வேண்டும்.*

என்று தமக்குக் கதை எழுத சுஜாதா கற்றுக்கொடுத்ததாகப் பாலகுமாரன் பிளாக்கில் சொல்கிறார்.

‘காணாமற்போனவர்’ கதையை சுஜாதா சொல்வதைப்போல் வகைப்படுத்தினால், அது







துப்பறியும் கதை வகையில்தான் போய்விழும். ஆனால், சுஜாதா சொல்லும் இலக்கணத்தை ஒட்டி ஷோபாசக்தி எழுதியிருந்தால், கண்டிப்பாக இந்தக் கதையை பொருட்படுத்திப் பேசிக் கொண்டிருக்கமாட்டோம்.

பாவெல் என்பவரைக் கொல்ல உத்தரவிடப்பட்டதைப் பற்றி ஒருவர் சொல்வதாக முதல் பத்தியில் தொடங்கிய கதை, கதையை நேர் செய்து பார்த்தால், இந்தப் பத்தி கதையின் இறுதியில் வந்து நிற்கும். ஆகவேதான், இரண்டாவது பத்தியை,

*இந்தக் கதை இப்படித்தான் ஆரம்பித்தது.*

என்று தொடங்குகிறார் ஷோபாசக்தி. தந்தை இறந்து நான்கு நாட்கள் ஆகி சென்னைக்கு போகவேண்டி நேர்வதை விவரித்து, விமானநிலையத்திற்கு வாசகனை அழைத்துச் செல்கிற, 2012ல் நடக்கிற கதைசொல்லியின் கதை, அங்கு வரும் சவரியான் என்கிற வேறொரு பாத்திரத்தின் மூலமாக பாவெல் என்கிற பாத்திரத்தின் மனைவியின் பெயர் பால்ராணி என்பதைக் குறிப்பிட்டு, முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால் சவரியான் சொல்கிற கதையாகச் மாறிவிடுகிறது. அதாவது 1977ஆம் ஆண்டிற்குச் செல்கிறது.

சவரியான், தலைமறைவு வாழ்க்கையில் தம்மைப் பாதுகாத்து உதவிய பாவெல் தோழரையே, போலீஸ் சித்தரவதையைத் தாங்கமுடியாமல் காட்டிக்கொடுக்க நேர்ந்ததையும், அந்தக் குற்றவுணர்வு காரணமாக சவரியான் உழல்வதையும் சொல்கிறது. பிறகு, பாவெல்லின் டிராட்ஸ்கிய சிறு கட்சி, 86ல் தமிழ்ப் பகுதிகளிலும் 88ல் சிங்களப்பகுதிகளும் தடைசெய்யப்படுகிறது.

பிறகு, 2004ல் வறுமையில் இலங்கையில் உழன்றுகொண்டிருந்த பாவெல்லை, பிரான்ஸிலிருந்து சவரியான் போய் சந்தித்ததைச் சொல்கிறது. முதலில் நட்புடனும் பண உதவியுடனும் தொடங்குகிற சந்திப்பு, பாவெல் தரப்பில் இடதுசாரி பார்வையிலும் சவரியான் பார்வையில் புலிகளின் ஆதரவாகவும் வெளிப்படுகிறது. தமக்கு மட்டுமின்றி சவரியான் புலிகளுக்கும் பெருந்தொகையைக் கொடுத்திருப்பது தெரியவர, சவரியான் அன்பளிப்பாய் கொடுத்த பொருட்களையும் பணம் ஐம்பதாயிரத்தையும் திருப்பிக் கொடுத்து நட்பை முறித்துக்கொள்கிறார் பாவெல். அவருடைய வீட்டைவிட்டு வெளியேறுகையில் பாவெலுக்குத் தெரியாமல் எதிரில் வந்து நிற்கும் பாவெல்லின் மனைவி, எதுவும் பேசாமல் பணத்தை மட்டும் வாங்கிக்கொண்டு செல்கிறார். சவரியான் பிரான்சுக்கும் வந்துவிடுகிறார். வந்த உடனே பாவெல் தோழருக்கு நீண்ட மன்னிப்புக் கடிதமொன்றை எழுதுகிறார். ஒரு மாதம் கழித்து பாவெல்லிடமிருந்து, வவுனியாவிலிருந்து அஞ்சல் செய்யப்பட்ட துண்டுப் பிரசுரமொன்று சவரியானுக்கு வருகிறது.

இது நடந்து ஓராண்டு கழித்து, 2005 வாக்கில், விடுதலைப் புலிகளால் கைது செய்யப்பட்டுக் காணாமல் போகிறார் பாவெல்.

இதுவரை கதை சொன்னது சவரியான். அதைத் தொகுத்துச் சொன்னவர் கதைசொல்லி. சவரியான், விமானம் புறப்படவிடுக்கும் நெருக்கத்தில், 2012ஆம் ஆண்டில் கதைசொல்லியிடம், கும்மிடிப்பூண்டியில் இருக்கும் அகதிகள் முகாமில் இருக்கிற பால்ராணியிடம், அவர் கணவர் பாவெல் பற்றி விசாரித்துத் தெரிந்து வருமாறு வேண்டிக்கொள்கிறார்.

*“தோழர் பாவெல் இன்னும் உயிரோடுதான் இருப்பார் என்றே எனது மனம் சொல்கிறது, அவரை எதுவும் செய்திருக்கமாட்டார்கள்” என்று சவரியான் சொல்லும்போது அவருக்குக் கண்கள் சிவந்து நீர் கோர்த்திருந்தது.*

இப்போது, கட்டுரையின் தொடக்கத்தில் குறிப்பிட்ட கதையின் முதல் பத்தியை நினைவுபடுத்திக் கொள்வது நல்லது.

கதையில் வருடங்கள் முக்கியம். அவற்றில் நிகழ்ந்த வரலாற்று நிகழ்வுகள் முக்கியம். இவையெல்லாம் பின்புலத்தில் முக்கிய பங்காற்றுகின்றன.

ஆண்டாண்டுகாலமாய் நடந்த போரின் காரணமாக மனிதர்கள் எப்படியெல்லாம் மாறிவிடுகிறார்கள் அல்லது நிர்ப்பந்திக்கப் பட்டிருக்கிறார்கள் என்பதைச் சொல்கிற கதையில்,

*சென்னை விமான நிலையத்திற்கு அம்மா வந்திருந்தார். ஒரு பெரிய அழுகையுடன் அம்மா என்னை எதிர்கொள்வார் என நினைத்திருந்த எனக்கு அம்மாவின் அமைதியான புன்னகை நிம்மதியைக் கொடுத்தது.*

சொல்லவந்த கதைக்குத் தொடர்பே இல்லாததுபோல கிளைக்கதையில் இப்படிப் போகிற போக்கில், சொல்லிவிட்டுப் போவது எல்லோருக்கும் எளிதில் கைவரும் காரியமில்லை.

கதையின் பிற்பகுதியில் வருகிற அம்மான், கடைசி பத்திக்கு முந்தைய பத்தியில், உண்மையில் யார் என்பது தெரிய வந்ததும், விடுபடும் எதிர்பாரா மர்மத்தில் பெரும்பாலான வாசகர்கள் பிரமித்து நிற்கக்கூடும். இதற்காகவே சுஜாதா, இதை சிறந்த கதை என்றும் சொல்லிவிடக்கூடும்.

ஆனால், இந்தக் கதையின் சிறப்பு, வாசகன் ஊகிக்கமுடியாதபடி கொண்டு சென்று இறுதியில்

மர்மத்தை விடுவிப்பதில் இல்லை. மனிதர்கள், தாம் பிழைத்துக் கிடப்பதற்காக, எப்படித் தாங்கள் அனுபவித்த அவலத்தையே பிறிதொருவன் மீது ஏற்றி, தங்களைப் பெருமையாகக் காட்டிக்கொள்ளவும் எல்லோருக்கும் தெரிந்த நிகழ்வுகளில் தம்மைப் பொருத்திப் புனைந்துகொள்வதிலும், அடுத்தவரிடம் தம் மீதான இரக்கத்தைத் தருவிக்கவும் கேட்பவருக்குக் குற்றவுணர்வை உண்டாக்கவல்ல கதைகளையும் பொய்களையும் அச்சு அசலாய் உண்மை போலவே தோற்றமளிக்கக்கூடிய கற்பனைகளையும் எப்படி உருவாக்கிக்கொள்கிறார்கள் என்பதைச் சொல்லாமல் சொல்கிற பிற்பகுதி முழுவதிலும் விரவிக் கிடக்கிறது.

இப்படி அடுக்கிக்கொண்டே போவதற்கு ஏகப்பட்ட விஷயங்கள் இருக்கின்றன. இதன் காரணமாகவே, மர்மம் விடுபட்ட பின்னும் திரும்பத்திரும்ப முழுமையாகவும் பகுதி பகுதியாகவும் பலமுறை படிக்க வைக்கிறது இந்தக் கதை. இலக்கிய தரமற்ற, சுஜாதா எழுதக் கற்றுக்கொடுத்ததாக பாலகுமாரன் பெருமையுடன் கூறிக்கொண்ட வெறும் க்ரைம் துப்பறியும் கதைகளுக்கு இது ஒருபோதும் சாத்தியமில்லை.

இந்த மர்ம க்ரைம் கதையின் மேன்மை, இறுதி வரியில் இல்லை. அதற்குச் சற்றுமுன்,

*ஏனோ அப்போது எனக்கு அம்மானிடம் பேரச்சம் உண்டாகியது.*

என்ற கதைசொல்லி, அதற்கு இரண்டு மூன்று பத்திகளுக்குப் பின்னர்,

*அம்மானின் கையை இழுத்து மறுபடியும் உட்கார வைத்துவிட்டு, பரிசாரகனை அழைத்து மது கொண்டுவரச் சொன்னேன்.*

என்று அம்மானைப் புரிந்துகொள்வதில் இருக்கிறது.

பிற்சேர்க்கை:

நேற்றிரவு, பேஸ்புக் மெசஞ்சரில் எனக்கும் லண்டனில் வசிக்கும் இலக்கியப் பரிச்சயமற்ற, இருபது இருபத்துமூன்று வயதுடைய ஈழ இளைஞர் ஒருவக்கும் இடையில் நடந்த உரையாடல் பின்வருமாறு:

*ஷோபாசக்தி கதை ஏதாச்சும் படிச்சிருக்கீரா?*

*இல்ல. எனக்கு ஷோபா பிடிக்காது. இல்லாத விசயத்த இருக்கிறா மாதிரி பொய் சொல்லும் அந்த ஆள்.*

*கதை படிக்கிற பழக்கம் உண்டா?*

*இது வர எந்த ஸ்டோரியும் படிச்சு இல்ல சேர். அதெல்லாம் ஸ்கூல் லைஃபோட போச்சு.*

*மாதா கதையின் சுட்டியைக் கொடுத்தேன்.*

*படிச்சிப் பாரும். இவன் மாஸ்டர்*

*ப்ரெண்ட் ஒருத்தன் கொரில்லா படிக்க சொன்னவன்.*

*சிறுகதைகள்ல இவன் பெரிய கை.*

*ம்ம் படிச்சு பார்க்குறன்*

*நேத்து நைட் ஆரம்பிச்சு விடியகாத்தால மூணாவது கட்டுரையையும் எழுதி முடிச்சிட்டேன். இன்னும் ஒரு கொதி விட்டு இறக்கினா போதும்.*

*அப்போ நாளைக்கு வேலை போகலையா.*

*இந்த மூணாவது கட்டுரைக்கான கதையைத்தான் முதலில் உமக்குக் குடுக்க 'நினைத்தினம்' அது நெட்டில் கிடைக்கேல்ல. அந்தக் கதையின் பெயர் சூக்குமம்.*

*உங்க ப்ளாக்ல போட்டுட்டீங்களா?*

*இல்லை. காலம் இதழுக்கு இப்போதான் அனுப்பிவிட்டு கனடா செல்வத்திடம் இப்பதான் பேசினேன்.*

என்று கூறிவிட்டு சூக்குமம் கதையை மொபைலில் போட்டோ எடுத்து, பேஸ்புக் மெசஞ்சரிலேயே இந்த இளைஞருக்கு அனுப்பினேன்.

படித்துவிட்டு அவர் அனுப்பி மறுமொழி இது:

*1st time ஒரு கதை படிச்சன் உங்க புண்ணியத்துல. இன்னில இருந்து நான் இப்படி நல்ல கதை நீங்க தந்தா படிக்கிறன். ஆனா எனக்கு ஒரு சந்தேகம். கதை முழுக்க யாழ்ப்பாணத்து பேச்சு வழக்கில இருக்கே. என்னால இலகுவில் விளங்கிக்கொள்ள முடிஞ்சது. உங்களால tamil டிக்சனரி இல்லாம இந்தக்கதைய விளங்க முடியாது எண்டுறது என்னோட ஊகம். ஒரு பக்கத்த எடுத்தாலே அதுல முக்காவாசி நம்ம பேச்சுவழக்கு தான். நீங்க எப்புடி விளங்குனீங்க.*

*அதெல்லாம் புரியும். இலக்கியம் தெரியும்ங்கறதால. உமக்கு எப்படி இருந்துது. அதச் சொல்லும்.*

*நல்லா இருந்த. ஷோபாட வேற நல்ல கதை போட்டு விடுங்க.*

எதையுமே படிக்காது எல்லாவற்றைப்பற்றியும் கருத்துகளை உருவாக்கிக்கொண்டு திரியும் இளைஞர்களிடம் நம்மால் செய்யக்கூடியது இவ்வளவுதான். ●

---

கதைகளைப் படிக்க:

எம்.ஜி.ஆர் கொலை வழக்கு: http://www.shobasakthi.com/shobasakthi/2009/04/18/எம்ஜிஆர்-கொலைவழக்கு/

காணாமற்போனவர்: http://www.shobasakthi.com/shobasakthi/2013/07/09/காணாமற்போனவர்/

விமலாதித்த மாமல்லன் < madrasdada@gmail.com>

# ஒரு நாவல் மூன்று பார்வைகள்

**திலகவதி - மா.காளிதாஸ் - விகாஷினி**

செல்லாத பணம் - இமையம்; விலை ரூ. 270; வெளியீடு: க்ரியா, 2 முதல் தளம், 17ஆவது கிழக்குத் தெரு, காமராஜர் நகர், திருவான்மியூர், சென்னை - 600 041; தொலைபேசி: +91 44 4202 0283

### திலகவதி

*செல்லாத பணம் நாவல் ஒரு காதல் கதை. ஒரு மரணத்தின் கதை. மரணம்தான் நாவலின் முக்கியக் கதாபாத்திரம். ஒரு குடும்பம் மரணத்தை எதிர்கொள்ள முடியாமல், தவிக்கிற தவிப்புதான் நாவல். மரணத்தை எதிர்கொள்ளா முடியாமல் எவ்வாறெல்லாம் மனிதர்கள் தத்தளிக்கிறார்கள் என்பதை இந்த நாவல் சொல்கிறது. காதலித்து திருமணம் செய்துகொண்ட இருவர் ஏன் இணைந்து வாழ முடியாமல் போகிறது? மனிதர்களால் ஏன் இணைந்து வாழ முடியவில்லை? காதலிக்கும் போது இனிக்கிற உறவு திருமணம் செய்துகொண்ட சில நாட்களிலேயே ஏன் கசந்து போகிறது? நம்முடைய இந்திய தமிழ் திருமண முறைகள்தான் மனிதர்களை ஒன்றாக இருக்க வைக்கவில்லையா? மனிதர்கள் எப்போது கசப்பின்றி வாழப் பழகுவார்கள்? என்று கேட்பதுதான் இந்த நாவல் சொல்லும் கதை. மரணத்திலிருந்து தப்பித்து வாழ்வதற்குத்தான் மனிதர்கள் போராடுகிறார்கள். சாத்தியம் இல்லாத ஒன்றுக்கான சாகசம்.*

*நாவலை படிக்க ஆரம்பித்துவிட்டால் போதும் இடையில் நிறுத்த முடியாது. நாவலில் வரக்கூடிய பாத்திரங்கள் மட்டுமல்ல அதைப் படிக்கிற வாசகனும் நாவலில் தானும் ஒரு கதாபாத்திரமாகி, கண்ணீரோடு அடுத்த நொடி என்ன நிகழும் என்று தெரியாத நிலையில் கையறு நிலையில் நிற்பதை காண முடியும். இந்த நாவல் மனிதர்களின் வழியே சொல்லப்படவில்லை. கதையின் வழியாக மனிதர்களை அறிமுகப்படுத்துகிறது. இந்த நாவலில் வரக்கூடிய ஆனந்தகுமார் என்ற கதாப்பாத்திரத்தின் இயல்பு சமூகத்தின் இயல்பாக இருந்தால் - இந்த வாழ்வு எப்படி இருக்கும்?*




*இமையத்தின் மொழி நம்மை வேறொரு சிந்தனைத் தளத்திற்கு நகர்த்திச் செல்கிறது. இமையத்தின் மொழி வசிகரமானது. கவிதை குணம் கொண்டது. நாவலின் கடைசிப் பகுதி க்ளாசிக் தன்மையைக் கொண்டிருப்பதை வாசகர்கள் அறிய முடியும். தமிழில் எழுதப்பட்ட ஆகச் சிறந்த நாவல்களில் ‘ செல்லாத பணம்’ ஒன்று என்று என்னால் உறுதியாகச் சொல்லமுடியும்.*

*ஒரு புத்தகத்தை எப்படி வெளியிட வேண்டும் என்பதை ‘க்ரியா’ ராமகிருஷ்ணனிடம்தான் கற்றுக்கொள்ள வேண்டும்.*

**திலகவதி ஐ.பி.எஸ்.** <thilakavathiips@gmail.com>

### மா.காளிதாஸ்

தன் போக்கில் கதை போதல், கதையின் போக்கில் நாம் போதல், கதை ஒரு பக்கம் நாம் ஒரு பக்கம் போதல் என்கிற வரையறைகளுக்குட்பட்டே எந்தவொரு கதை சொல்லியும் செயல்படுகிறான். இந்த மூன்று போக்குகளுக்குமான வாசிப்பனுபவத்தை வாசகனுக்குத் தருகிற கதையே தன்னளவில் வெற்றி பெறுகிறது.

நம் வாழ்வனுபவத்துக்கும் நம் உணர்ச்சிப் பெருக்கிற்கும் நெருக்கமான கதைகள் அருகிவரும் காலக்கட்டத்தில், இமையம் மேலும் மேலும் தன்னை நிரூபித்துக்கொண்டே இருக்கிறார். எவ்வித பாசாங்குகளும் இல்லாமல், துலக்கி வைக்கப்பட்ட பாத்திரங்கள் போல எல்லாப் பாத்திரங்களும் மினுங்குகின்றன. அதிகமாகப் பேசும் அமராவதி கதாபாத்திரம்கூட, அவசியத்தோடுதான் பேசுகிறேன் எனத் தன் தரப்பு நியாயத்தை முன்னிறுத்துகிறது.

ஒரு தற்கொலை, எத்தனை ஆண்டுகள் ஆனாலும் கொலையாகவே சித்தரிக்கப்படுவதற்கான அத்தனை சாத்தியக் கூறுகளையும் தன்னகத்தே கொண்டுள்ளது என்பதையே கதையின் மையப்புள்ளியாகக் கருத வேண்டியிருக்கிறது. அதேபோல், “ஆம்பளையும் பொம்பளையும் சண்ட போடுறதுக்குக் காரணமா வேணும்? சோத்துல ஒரு கல்லு இருந்தா போதாதா?” என முன்பே ஒரு குறுந்தகவலைக் கொடுத்துவிட்டுத்தான், ரேவதியின் மரணத்திற்கான காரணமும் விளக்கப்படுகிறது. அத்தனை அடிகள், அத்தனை வசைச் சொற்கள், அத்தனை சந்தேகங்களின் போதெல்லாம் கல்லாக இருந்தவளுக்கு, அம்மா தவணை கட்டக் கொடுத்த பணத்தில் 500 ரூபாய் எடுத்ததுதான் தற்கொலைக்கான சாக்காக அமைவது, மனித மனத்தின் தன்னியல்பு



என்பதைச் சொல்லாமல் சொல்கிறது கதை.

நாவல் முழுக்கவும் கதை விரிவடைவதைவிட, மனித மனங்களின் குறுகிய வெளிப்பாடுதான் விரிந்துகொண்டே செல்கிறது. தன்மீது பழி வந்து விடுமோ என்கிற பதட்டமும், அந்தப் பதட்டத்தை வெளிக்காட்டிக் கொள்ளாமலும், பழிக்கு அண்மையில் இருக்கிறோம் என்கிற உணர்விலிருந்து உள்ளூர விடுபட முடியாமலும், அதே நேரம் பழிக்கும் தனக்கும் எந்த சம்பந்தமும் இல்லையென்பதை எந்த வகையிலாவது மெய்ப்பித்துவிடத் துடிக்கும் எத்தனமும் என, மனித வாழ்வின் எதார்த்தங்கள் அதன் அசலான முகங்களோடு வெளிப்படுகின்றன.

'செல்லாத' என்கிற பதமே திரும்பத் திரும்ப மருக வைக்கிறது. எந்தப் பாகுபாடுமின்றிப் பணம் செய்யும் மாயம் கண்முன் விரிகிறது. பணம் இல்லாவிட்டால், நாம் அனைவருமே வேகாத பிணம்தான் என்கிற கருத்து வரிக்கு வரி இழையோடுகிறது.

ரேவதி - ரவி காதலை சாதி, வசதி, தொழில்ரீதியாக வன்மையாக மறுக்கும் நடேசன் - அமராவதி தம்பதியருக்கு, முருகன் - அருண்மொழி காதலை ஏற்க வைத்தது மட்டுமின்றி, ரேவதியைக் காதலிலிருந்து கடத்துவதற்கு அருண்மொழியைத் துருப்புச்சீட்டாகப் பயன்படுத்துவதற்கான மையமாகத் திகழ்வதும் பணம்தான் என்பதைச் சொல்லாமலே விளங்கிக்கொள்ள முடிகிறது. அருண்மொழியின் சாதி, பெற்றோர் குறித்த விவரங்கள், முருகன் - அருண்மொழியின் படிப்பு, பணி, மேம்பட்ட வாழ்க்கை முறைகளுக்கு முன் அவசியமற்றதாகி விடுகிறது என்பதை, "படிப்பில், சாதியில், வேலையில் முருகனைவிடக் கீழே இருந்திருந்தால், எதுவுமே இல்லாதிருந்தால் ரவியும் தானும் ஒன்றுதானே?" என நினைத்து அருண்மொழி அழும்போது, "புள்ளைங்க பெத்தவங்களச் சாவடிக்கிறாங்களா? பெத்தவங்க புள்ளைங்களச் சாவடிக்கிறாங்களா?"ன்னு வேறு ஒரு இடத்தில் வரும் வசனம், மீண்டும் மீண்டும் எதிரொலிக்கிறது.

பணம், அதிகாரம், நிலவுடைமை, தனியுடைமை, மௌனம், புறக்கணிப்பு போன்ற எந்த பலத்தால் ஒடுக்கப்பட்டாலும், ஒடுக்கப்படுகிற இனம், தலித் கட்டமைப்புக்குள்தான் பொருந்தும். தன்னிலும் கீழானவனை நாயினும் கீழானவனாக மதிக்கும் சமூகம், பேயினும் மேலாகவே மதிக்கப்படும். ஆசிரியராக, அதிலும் தலைமையாசிரியராக இருக்கும் ஒருவர், சாதி, மத, ஏழை, பணக்கார உணர்வுகளுக்கு அப்பாற்பட்டு, பள்ளியில் மட்டும் செயல்படுவதான தோற்றம், ஒருபோதும் அவரை முன்னெடுத்துச் செல்லாது என்பதற்கு, நடேசன் ஒரு மிகச் சிறந்த உதாரணம்.

மணமாகாத, வயதான மகளை வைத்துக்கொண்டு, கோகிலா போன்ற அம்மாக்கள் படும் அவஸ்தைகள் எவ்வாறு சகித்துக்கொள்ள முடியாதவையோ, அதே போன்றே, "வேல பாக்கிற இடத்துல கூடவா இழுத்துட்டுப் போற மாதிரி ஒரு பயலும் ஒங் கண்ணுல படல?" எனப் பிரியங்காவின் மீது மீண்டும் மீண்டும் காட்டும் வெறுப்பு, அவளையும் தற்கொலைக்கோ அல்லது சமூகம் தவறானதெனக் கட்டமைத்திருக்கும் வழிக்கோ செல்லத் தூண்டுவதற்கான அருவருப்பின் உச்சமே.

**விகாஷினி**

நாவலின் தலைப்புக்கு ஏற்றவாறு நிறைய இடங்களில் பணம் செல்லாமல் போய்விடுகிறது. இச்சமூகத்தில் சாதி ஏற்றத்தாழ்வு, பணத்தின் மதிப்பு, மனித மனிதன் இயல்பு எப்படி மாறிமாறி இயங்கும் என்பதுதான் 'செல்லாத பணம்'. நாவலில் நிறைய கதாபாத்திரங்கள் இருக்கின்றன. அத்தனையும் மனதுக்கு நெருக்கமானவையாக இருக்கின்றன. மலர், தன் மகள் இறக்கும் தருவாயில் மகளின் இறப்பிற்காக அழுவதா, தான் பாசமாய் வளர்த்து விற்ற ஆட்டு குட்டிகளுக்காக அழுவதா என்று தெரியாமல் நிற்பதும், விற்ற ஆட்டு குட்டி போகும் போது, பார்த்த பார்வை தன்னை சும்மா விடாது என்று சொல்லி அழும் காட்சி மனதில் படம் போல் நிற்கிறது. ஜிப்மர் ஆஸ்பத்திரி முழுவதும் நிழல் படமாக கண் முன் தோன்றுகிறது. காதலித்து திருமணம் செய்துக்கொண்ட பெண்ணை, காதலித்து திருமணம் செய்துகொண்ட கணவனே தீ வைத்து கொளுத்திய பெண்ணின் துயரம், அவலம், மரணம்தான் செல்லாத பணம் நாவல்.

அம்மா அமராவதிஞ். ரேவதி திருமணத்திற்கு முன் சதா திட்டும் அம்மா - திருமணத்திற்கு பின்பு மகளின் துன்பத்திற்காக அழும் அம்மா, அவ்வப்போது கணவனுடன் மகனுடன் பேசுகையில் சண்டையிடும் அம்மா. இச்சமூகத்தில் இருக்கிற நிறைய அமரவாதிகளை நினைவூட்டுகிறது. ரேவதியின் பிணத்தின் முகத்தில் இருந்து கால் வரை இரண்டு கைகளால் ஆசையுடன் கைக்குழந்தையை தடவுவது போல் தடவிப்பார்க்கும் காட்சி ஒரு தாயின் மரண வேதனையை பிரதிப்பலிகிறது. எதார்த்த சூழ்நிலையில் காவலர் என்றால் லஞ்சம்

வாங்குவார்கள், மனசாட்சி இல்லாதவார்கள் என்ற பொது பிம்பத்தை உடைக்கும் சாட்சியாக ஆனந்தகுமார், கதிரவன், செல்வம் போன்றவர்கள் இருக்கின்றனர். ஆனந்தகுமார், கடைசியாக தனக்கு சேர வேண்டிய பணத்தை, “ரேவதி பிணத்திற்கு மாலை வாங்கிகோங்க” என்று 1000 ரூபாயைக் கொடுக்கும் காட்சி மனதை தைக்கிறது.

அமராவதி, கடைசியாக ரேவதியை பார்த்து, “தூங்கிட்டியா அம்மா தூங்கு. இனி ஒனக்கு எந்த தொந்தரவும் இல்ல. தப்பு செஞ்சிட்டோமேன்னு இனி நீ அழுவமாட்ட. யாரும் உன்ன திட்ட முடியாது. அடிக்க முடியாது” என்று சொல்லி அழும் காட்சி கண்ணீரை வரவழைக்கிறது. அவசர காதலினால் எடுக்கப்படும் முடிவு, அதனால் ஏற்படும் விளைவு, அதனால் பெற்றோர் படும் துயரம் என எதார்த்த சூழ்நிலையை கண்முன் காட்டுகிறது நாவல்.

நாவல் பெண்களின் நிலையை, இச்சமூகத்தை அப்படியே பிரதிபலிக்கிறது. நன்கு படித்த ரேவதியின் நிலையும், மலரின் மகளின் நிலையும் வேறுபாடு இல்லாமல் தராசு தட்டு போல் சமமாக இருக்கிறது. நாவலை வாசித்த பின்பு எனது சொந்த வாழ்வில் துக்கம் நிகழ்ந்தது போல் உணர்கிறேன். நம் வாழ்க்கையில் அன்றாடம் சந்திக்கும் மனிதர்களும் அவர்களின் பிரச்சினைகளையும், சமூக சாதிய ஏற்றதாழ்வுகள் இவை அனைத்தையும் நிழல் படம் போல் இந்நாவல் பிரதிப்பலிக்கிறது.

செல்லாத பணம் நாவல் கதை அல்ல, வாழ்க்கை. பொய் கலப்பில்லாத நிஜ வாழ்க்கை. இலக்கியம் வாழ்க்கையைத்தானே எழுத முடியும்? இமையம் வாழ்க்கையை எழுதியிருக்கிறார். ●

# வாசிப்பெனும் பாய்மரக் கப்பலில்...

டிசே தமிழன்

ஜீ.முருகன் சிறுகதைகள் - ஜீ. முருகன்; விலை ரூ. 320; வெளியீடு: ஆதி பதிப்பகம், 15 மாரியம்மன் கோவில் தெரு, பவித்திரம் - 606 806, திருவண்ணாமலை; அலைபேசி: +91 99948 80005

துரதிர்ஷ்டம் பிடித்த கப்பலின் கதை - பாலசுப்ரமணியன் பொன்ராஜ்; விலை ரூ. 150; வெளியீடு: யாவரும் பப்ளிஷர்ஸ், புவனேஸ்வரி நகர், 3வது பிரதான சாலை, வேளச்சேரி, சென்னை - 600 042; அலைபேசி: +91 90424 61472

ஜீ. முருகனின் கதைகளை அண்மையில் வாசித்து முடித்திருந்தேன். இத்தொகுப்பில் 50 கதைகள் இருக்கின்றன. சில வருடங்களுக்கு முன் ஜீ.முருகனின் 'மரம்' குறுநாவலைத் தற்செயலாகக் கண்டெடுத்து வாசித்ததுபோது வியப்பேற்பட்டது போலவே இப்போது முழுத்தொகுப்பாய் அவரின் கதைகளை வாசிக்கும்போதும் வசீகரிக்கின்றது. பெருந்தொகுப்புக்களின் முக்கிய சிக்கலென்பது வாசிப்பில் நம்மை ஏதோ ஒருவகையில் அலுப்படையச் செய்துவிடும். ஆகவேதான் எனக்குப் பிடித்த படைப்பாளிகளாயினும் அவர்களின் பெருந்தொகுப்புக்களை வாங்கிவிடவோ வாசிக்கவோ தயங்கிக்கொண்டிருப்பேன். ஆனால், ஜீ.முருகனின் இந்தத் தொகுப்பு அலுப்பே வராமல் என்னை வாசிக்கச் செய்திருந்தது. நமது சூழலில் இவ்வாறு நறுக்காகவும் நுட்பமாகவும் எழுதும் ஜீ.முருகன் இன்னும் அதிகம் கவனிக்கப் பெற்றிருக்கவேண்டுமே என்ற எண்ணமும் இன்னொருதிசையில் போய்க்கொண்டிருந்தது.

இவ்வாறு இன்னும் பல எழுத்தாளர்கள் கவனிக்கப்படாமலே இருக்கின்றார்கள். வாசிப்பின் சுவாரசியம் என்பதே, ஒரு பெரும் திரள் ஓடிக்கொண்டிருக்கும் திசைக்கு இன்னொரு திசையில் எமக்குப் பிடித்தமானவற்றை நாமே கண்டுபிடித்து நமக்கு நெருக்கமாக்கிக்கொள்வதுதான். அந்த உருசியை அறிந்துகொண்டபின் 'பரப்பியசத்திற்குள் விட்டில் பூச்சியாக விழாது / மயங்காது' மேலும் மேலும் நம் சிறகுகளை விரித்துச் செல்லமுடியும். இவ்வாறுதான் அண்மையில் நண்பரொருவருக்கு ரமேஷ் பிரேதனை அறிமுகப்படுத்தியிருந்தேன். ரமேஷின் 'ஐந்தவித்தானை' வாசித்தபின் ஒரு புதிய வாசிப்புத் திசை தெரிந்ததில் அவர் மகிழ்ந்துகொண்டிருந்தார்.



எழுத்தை செய்நேர்த்தியாக - ஒருவகை தொழில்நுட்பத்துடன் - அதில் ஒருகுறிப்பிட்ட காலம் 'உழல்கின்ற' எவராலும் செய்யமுடியும். ஆனால், மனம் ஊறி எழும் எழுத்துக்கள் அரிதாகவும் இலைமறை காய்களாகவுமே பெரும்பாலும் இருக்கும். ஆகவேதான் என் வாசிப்பில் தொடக்கத்தில் பெரும் அதிர்வை உண்டாக்கிய 'ஜே.ஜே.சிலகுறிப்புக்கள்' நாவலை இன்று மீள வாசிக்கும்போது அதன் 'செய்நேர்த்தி'யை மட்டும் வியக்கவும் அதேகாலகட்டத்தில் எழுதப்பட்ட, சாவை நோக்கி தொடர்ந்து கேள்வி எழும்புகின்ற சம்பத்தின் 'இடைவெளி'யை இப்போது நெருக்கமாகவும் கொள்ளவும் முடிகின்றது. இதன் அர்த்தம் 'இடைவெளி', 'ஜே.ஜே. சிலகுறிப்புகள்' நாவலை தாண்டிவிட்டதென்பதல்ல. 'இடைவெளி' அதனளவில் முழுமையடையாது இருப்பினும் அது எழுப்பிய கேள்விகள் உண்மையிலே சாவு குறித்து என்னவென்று அறிய விரும்பிய மனத்தின் தேடல் என்றவகையில் என்னால் அதிகம் இடைவெளியைக் கொண்டாட முடிகின்றது.

அதேபோன்றுதான் அநேகர் வியக்கின்ற சு.வேணுகோபாலை முதன்முதலாக அவர் யாரென்று தெரியாமலே 2000களின் தொடக்கத்தில் கிளிநொச்சியில் 'அறிவமுதில்' வாங்கி வாசித்தபோது மட்டுமல்ல, இப்போதும் ஒரு வாசிப்பிற்காய் அவரின் 'களவு போகும் புரவிகளை' மீண்டும் புரட்டும்போதுகூட தொலைவிலேயே நின்று புன்னகைக்கின்றார். ஆனால், 2000களின் தொடக்கத்தில் இளம் எழுத்தாளராக நாஞ்சில் நாடனால் அறிமுகப்படுத்தப்படுகின்ற எம்.கோபாலகிருஷ்ணனின் (சூத்ரதாரி) 'பிறிதொரு நதிக்கரை' என்னை எளிதாக உள்ளிழுத்துக்கொள்கின்றது.

ஜீ.முருகனைப்போல, சூத்ரதாரியைப் போல அதிக ஆர்ப்பாட்டமில்லாது எழுதிக்கொண்டிருக்கும் பலர் நம்மிடையே இருக்கக்கூடும். அவ்வாறானவர்களை நாமாகத் தேடிக்கண்டுபிடிக்கும்போது கிடைக்கும் வாசிப்பின் சுவை என்பது அலாதியானது. எல்லோருக்கும் வாசிக்கின்றார்களே என ஒரு படைப்பாளியை, கும்பலோடு சேர்ந்து



ஜீ. முருகன்



பாலசுப்ரமணியன் பொன்ராஜ்

தேடியோடாமல் நமக்குரிய வாசிப்பின் ஊற்றுக்களைக் கண்டுபிடிப்பதே - முக்கியமாய் நிறையப் படைப்புக்கள் வெளிவரும் இன்றையகாலகட்டத்தில்- வாசிக்கும் நமக்குத் தேவையாக இருக்கின்றது. அவ்வாறாக நமக்குரிய படைப்பாளிகளை / படைப்புக்களை நெருக்கமாக்கிக்கொள்ளும்போது சிலவேளைகளில் அது நமது அலுப்பான பொழுதுகளைக் கூட சிலிர்ப்படையச் செய்துவிடக்கூடும்.

பாலசுப்ரமணியன் பொன்ராஜ்ஜின் 'துரதிர்ஷ்டம் பிடித்த கப்பலின் கதை' அண்மையில் வந்த சிறுகதைத் தொகுப்புக்களில் விலகி நிற்கும் தனித்துவமான பனுவலாகும். வாசிப்பவர் கதைகளின் ஏதேனும் ஒரு குவிமையத்தில் நிலைகுத்துவதைத் தவிர்த்து, பல்வேறு திசைகளில் வாசிப்பில் உடைப்புக்களைச் செய்து சிதறவிடுவதை இத்தொகுப்பின் சிறப்புக்களில் ஒன்றாகச் சொல்லலாம். இவ்வாறான நீண்ட வாக்கியங்களில் கதை சொல்வதில் இருக்கும் அழகும் ஆபத்தும் என்னவென்றால் வாசிப்பவருக்கு அலுப்புவராமல் நகரச் செய்வது என்பதேயாகும். அந்தவகையில் மட்டுமில்லாது, நிறையக் கதைகளைச் (9 கதைகள் மட்டுமே) சேர்க்காமலும் இத்தொகுப்பு கச்சிதமாக வெளியிடப்பட்டிருப்பது குறிப்பிட்டுச் சொல்லவேண்டியது.

'தந்திகள்' மற்றும் 'உடைந்துபோன ஒரு பூர்ஷ்வா கனவு' வேலை இழந்துபோன ஒருவனின் கதையைச் சொல்கின்றது. தகவல் தொழில்நுட்பத்தில் வேலை செய்பவன் திடீரென்று வேலையிலிருந்து அனுப்பப்படுவதால் அவனது வாழ்வு குலைக்கப்படுகின்றது என்பதை வழமையாக அலுப்பாகச் சொல்லப்படும் மொழியிலிருந்து விலகிச் சொல்வதால் இவ்விரு கதைகளும் பிடித்துப்போகின்றது. 'தந்திகள்' கதை, வேலை இழந்தவன் பத்து மாதங்களாகியும் இன்னொரு வேலையை எடுக்கமுடியாது திண்டாடுவதால் அவனது மனைவி அவனை விட்டு விலகிப்போக, ஒரு இறந்துபோன - உடல்கெட்டுப்போகாத - பூனையோடு வாழ்பவனின் கதையென்றால், மற்றக் கதையில் வாடகைக்கொடுக்கப் பணமில்லாததால் தம்பதியினர் தேடி வாங்கிய பச்சைவர்ண ஸோஃபாவை விற்று, தமது 2ஆவது ஆண்டு திருமணநாளுக்கு நண்பர்கள் என்ன பரிசைக்கொண்டு வருவார்கள் என்று யோசிப்பதில் போகும் நாட்களைப் பற்றியது. இரண்டிலும் வேலை இழப்பைப் பற்றிச் சொன்னாலும் இன்னொருவகையில் வேலையில்லாத் துயரத்தைவிட, வேலையில்லாத நாட்களில் வாழ்க்கையை இரசிப்பவனின் பொழுதுகள் ஊடுபாவாக மறைந்துகிடப்பதையும் வாசிப்பவர்கள் உணர்ந்துகொள்ளமுடியும்.

இந்தத் தொகுப்பில் எனக்கு மிகப் பிடித்த

கதைகளாக 'நாளை இறந்துபோன நாய்', 'வலை', 'உடற்பயிற்சி நிலையத்துக்குச் செல்பவர்கள்' மற்றும் 'தந்திகள்' போன்றவற்றைச் சொல்வேன்.

ஹருக்கி முரகாமியின் கதைகளை வாசிக்கும்போது ஒரே ஒரு பாத்திரம் அல்லது அதன் சாயல்கள்தான் அநேக கதைகளில் தொடர்ந்து வருகின்றனவோ என நினைத்துக்கொள்வேன். அவ்வாறுதான் இத்தொகுப்பிலும் ராக் இசை கேட்கும் நீட்ஷேயை / காப்ஃகாவை / போர்ஹேஸை நிறைய வாசித்த, துணையோடோ / துணையின்றி இருந்தாலோ தனிமைக்குள் அமிழ விரும்பும் ஒருவனே







பாலசுப்ரமணியன் பொன்ராஜ்ஜின் எழுத்தில் இருந்து எழுந்து வருகின்றாரோ என நினைக்கத் தோன்றுகின்றது.

யதார்த்தக் கதைசொல்லல்களின் சோர்விலிருந்து விடுபடவும் நமது மனது எண்ணற்ற திசைகளில் சிந்திப்பதைப் போல எழுத்துக்களினூடாக ஒரு வாசிப்பைச் செய்ய விரும்புவர்களும் இத்தொகுப்பை துணிந்து வாசிக்கத்தொடங்கலாம். ●

டிசே தமிழன் <elanko@rogers.com>

# இன்குலாப் கட்டுரைத் தொகுப்பு

பா. செயப்பிரகாசம்



மக்கள் பாவலர் இன்குலாப் அவர்களின் இரண்டாமாண்டு நினைவு நாள் வரும் திசம்பர் முதல் நாள் (01- 12- 2018) சனிக்கிழமையன்று நடத்திட திட்டமிடப்பட்டுள்ளது. அவரது நினைவைப் போற்றும் வகையில் கவிதை நிகழ்வு, கருத்தரங்கு நிகழ்வுகளினூடாய், இன்குலாப் அவர்களின் அனைத்துக் கட்டுரைகளையும் முழுமையான தொகுப்பாக வெளியிட முடிவு செய்யப்பட்டுள்ளது. ஏற்கனவே இன்குலாப் கட்டுரைகள் தொகுப்புகளாக வந்துள்ள போதும் இத்தொகுப்புகளில் இணைக்கப்படாத கட்டுரைகள், நேர்காணல் ஆகியன இதழ்களில், மலர்களில் வெளியானவை பல உள்ளன. தொடர்புடைய நண்பர்கள் விடுபட்டவைகளை அனுப்பி உதவுமாறு கேட்டுக்கொள்கிறோம். தொகுப்பாளராக எழுத்தாளர் செ. சண்முக சுந்தரம் செயல்பட இசைந்துள்ளார்.

கட்டுரைத் தொகுப்பு முழுமைபெற ஒத்துழைப்பை வேண்டுவதுடன், கடந்த ஆண்டு நிகழ்வைப் போல இவ்வாண்டும் நிகழ்வைச் சிறப்பாக நிகழ்த்துவதற்குத் தங்கள் கைகோர்ப்பினை 'இன்குலாப் அறக்கட்டளை' வேண்டுகிறது.

தொகுப்பாளர் முகவரி: செ. சண்முக சுந்தரம், 1 அடைக்கல மாதா நகர் விரிவாக்கம்,மாதாக்கோட்டை சாலை, தஞ்சாவூர் - 613005. பேசி: +91 94422 60832; மின்னஞ்சல்: cshanmughasundaram@gmail.com

# அறுங்குடா காற்று

கோ. நாதன்

என்
நிலம் அபரிக்கப்படுகின்றது
உண்மையாகவே
எத்தனை
குரல்கள் மேலெழுகின்றன?

செங்காமம்,
சாஸ்திரவெளி,
ஊறணி,
செல்வவெளி
எல்லை முகாங்களில்
துப்பாக்கி கீழிறக்கிய இராணுவம்
காவலரண்களுள்
தலை சாய்த்து உறங்குகின்றனர்?

தொல்பொருள் ஆராட்சிக்குட்பட்ட
தலையற்ற புத்தர் (முது மகா விகாரை )
அதி உயர் விகாரை ஆக்கப்பட்டதும்,
பல மைல் அப்பாலுள்ள (லாகுல )
சிங்கள கிராமத்து சிறுமி
செந்தாமரையுடன் வலம் வருகிறாள்.

மண்மேட்டில் விழும்
நிலவொளியை மிதிக்க
நல்நாளில் செல்லும் நிலத்துக்குரியவன்
அச்சத்தில் அனுமதியை
எங்கிருந்து வந்தவன் கொடுக்கிறான்?

மிருகங்களின் கால்களில்
மீதிப்பட்ட பசுமைக் காடுகள்
உல்லாசப் பயணிகள்
உள்ளாடைகளில் சிக்கிக் கொண்டிருக்கிறது.



மூத்த குடி
காடு வெட்டி வளர்த்த கிராமம்
வந்தேறிய குடியினால்
களவாடி மறைக்கப்பட்டிருக்கிறது. ●

கோ. நாதன் <naathanaris@gmail.com>

# பின் நகர்ந்தகாலம்

வண்ணநிலவன்

எழுத்தாளனுடைய வேலையே படிப்பதும் எழுதுவதும்தான். எழுத்தைவிட வாசிப்பது, என்னைப் பேயாய் பற்றிக்கொண்டு ஆட்டுவித்தது. பள்ளியில் பயின்ற காலத்தில், பாடப் புத்தகங்களில் அக்கறை காட்டியிருந்தால் நல்ல மாணவனாக இருந்திருப்பேன். பாட நூல்களைப் படித்து தேர்வுகளில் 'மார்க்' எடுக்க வேண்டியதிருக்கிறது. தமிழும் சரித்திரமும் ஓரளவு என் மன நிலைக்கு ஒத்து வந்தன. பிறகு, ஆங்கில மொழிப் பாடமும் பிடித்திருந்தது. ஆனால், கணக்கும் விஞ்ஞானமும் எட்டிக் காயாகக் கசந்தது. எல்லா வகுப்புகளிலுமே நான் கடைசி பெஞ்ச் மாணவனாகத்தான் இருந்தேன். திருநெல்வேலி மாவட்டத்தில், கடைசி பெஞ்சை, சக மாணவர்களும் ஆசிரியர்களும் 'மாப்பிள்ளை பெஞ்ச்' என்பார்கள்.

பாடப் புத்தகங்களைவிட பத்திரிகைகளைப் படிப்பதிலும் கதைகளைப் படிப்பதிலுமே ஆர்வம் இருந்தது. நேரம் கிடைக்கிற போதெல்லாம் எதையாவது படித்துக் கொண்டிருப்பதும் வாசிப்பில் மனசைப் பறிகொடுத்து நிற்பதும் வழக்கமாக இருந்தது. இப்போதும் எழுதுவதைவிட வாசிப்பதையே மனம் விரும்புகிறது. கண்டதையும் படித்துப் பண்டிதன் ஆவதைவிட, கண்டதையும் படித்து, அதில் மனம் தோய்ந்து போய், நடை முறை வாழ்வை விட்டு விலகி, அந்நியப்பட்டு நிற்கும் ஆபத்தும் இதில் உள்ளது. நண்பர் வண்ணதாசன், தன் மனசைக் காப்பாற்றிக்கொள்ள, கட்டுரைகளைப் படிப்பதை பெரும்பாலும் தவிர்த்து விடுவார். ஆனால், வாசிக்கிற போதையில் மூழ்கிக் கிடக்கும் நான் இதற்கு நேர் எதிர்.



எழுத்தாளன், மார்க்ஸியம் போன்ற தத்துவங்களைப் படித்து ஆகப் போகிறது எதுவுமில்லை. வெறும் வறட்டு அறிவைக் கொள்முதல் செய்ததுதான் மீதம். ஆனால், வகை தொகையில்லாமல் படிக்கும் என்னுடைய பழக்கத்தினால், மார்க்ஸிய நூல்களைப் படித்தேன். 1970-க்களின் இறுதியில், எஸ்.வி.ராஜதுரை எழுதிய 'அந்நியமாதல்' புத்தகத்தையும் இப்படித்தான் விழுந்து விழுந்து படித்தேன். எஸ்.வி.ஆரை பெரிய அறிவுஜீவியாக என் மனம் எடைபோட்டது. ஒருநாள் எஸ்.வி.ஆர்., தி.நகர் மகாலெட்சும் தெருவிலிருந்த ரவிசங்கர் வீட்டிற்கு வந்திருந்தார். ரவிசங்கர் 'பிரக்ஞை' சிற்றிதழின் ஆசிரியர் குழுவில் இருந்தார்.

எஸ்.வி.ஆரைப் பிரமிப்புடன் பார்த்தேன். அப்போது எஸ்.வி.ஆர். நீலகிரி மாவட்டம் நடுவட்டம் என்ற ஊரில், மாநில அரசின் சின்கோனா திட்டத்தில் பணியாற்றி வந்தார். அவர் சென்னை வந்து சென்ற பிறகு, ரவிசங்கர் நடுவட்டத்திற்குப் புறப்பட்டார். என்னையும் தன்னுடன் வருமாறு அழைத்தார். என்னுடைய போக்குவரத்துச் செலவையும் ரவிசங்கரே பார்த்துக் கொண்டார். இருவரும் கோயமுத்தூருக்கு ரயிலில் சென்று, அங்கிருந்து ஊட்டி சென்றோம். ஊட்டியை அப்போதுதான் முதல்முதலாகப் பார்த்தேன். ஊட்டியிலிருந்து பைக்காரா வழியாக நடுவட்டம் போகும் பஸ்ஸில் ஏறினோம். நடுங்கும் குளிரில் காலை பதினோறு மணி வாக்கில் நடுவட்டத்தில் இறங்கினோம். அருகில்தான் எஸ்.வி.ஆரின் வீடு இருந்தது.

அவரது மனைவி சகுந்தலா, எங்களை அன்புடன் வரவேற்று உபசரித்தார். குளிருக்கு இதமாகத் தேநீர் தயாரித்துக் கொடுத்தார். வென்னீரில் குளித்தோம். பிறகு தோசை சாப்பிட்டோம். எஸ்.வி.ஆர். என்னைப் பிரியத்துடன் 'ஃப்ராடு' என்று அழைப்பார். அவருக்கு நல்ல நகைச்சுவை உணர்வு உண்டு. அவரது கேலியும் கிண்டலும் நமக்கு ரொம்பவும் வேண்டப்பட்ட ஒருவருடைய கிண்டலைப் போல், மனசுக்கு இதமாக இருக்கும். புண்படுத்தாத கேலி, கிண்டல் அவருடையது. அதில் ஒரு உரிமையும் இருக்கும்.

ஒரு சிறு ஏரி, சுற்றிலும் மலைகள், சில வீடுகள் இவற்றைத் தவிர நடுவட்டத்தில் எதுவுமில்லை. ராஜதுரையும் அவர் மனைவியும் வேலைக்குச் சென்று வந்தனர். அப்போது தொலைக்காட்சியும் வரவில்லை. சாயந்திரம் எஸ்.வி.ஆர். பக்கத்திலுள்ள ஏதாவது மேட்டுக்கு அழைத்துச் செல்வார். பொழுதே போகாது. ஆனால், ரவிசங்கர் அந்த ஏகாந்தத்தை ரசித்தார். எனக்கு அலுத்துவிட்டது. நான் ஊருக்குக் கிளம்புகிறேன் என்று சொன்னேன். ரவிசங்கர், பணம் கொடுத்து நடுவட்டத்தில் பஸ் ஏற்றி விட்டார். தப்பித்தோம் பிழைத்தோம் என்று சென்னையில் வந்து விழுந்தேன்.

எடிட்டருக்கு (சோ) சினிமா உலகில் நிறைய நண்பர்கள் உண்டு. அப்போது சினிமாவிலும் நடித்துக் கொண்டிருந்தார். ஆனந்தி பிலிம்ஸ் வேணுச் செட்டியார், எடிட்டரின் நெருங்கிய நண்பர்களில் ஒருவர். அடிக்கடி 'துக்ளக்' அலுவலகத்துக்கு வந்து, எடிட்டருடன் பேசிக் கொண்டிருப்பார். ஏ.எல்.எஸ். புரொடக்ஷனில் மானேஜராக இருந்த வீரையா, உதவி இயக்குனர் எஸ்.ஜ.பெருமாள் (இவரைப் 'பெரிய பெருமாள்' என்போம். ஏனென்றால், 'பெருமாள்' என்ற பேரில், இன்னொரு உதவி


முள்ளும் மலரும் படத்தில் ரஜினி, ஷோபா

இயக்குனரும் இருந்தார்.), புரொடக்ஷன் மேனேஜர் தட்சிணாமூர்த்தி (இவரை எடிட்டர் 'அரிச்சந்திரன்' என்று கூப்பிடுவார். பொய் இவர் வாயிலிருந்து சர்வ சாதாரணமாக வரும்.) 'முகமது பின் துக்ளக்' படத்தின் தயாரிப்பாளரும் சுந்தர ராமசாமியின் தாய்மாமனாருமான 'பரந்தாமன்' என்ற நாராயண ஐயர் என்று, ஒரு பெரிய ஜமாவே 'துக்ளக்' அலுவலகத்திற்கு வந்து செல்லும்.

எடிட்டர் பேச்சு, எழுத்தில் மட்டும் அல்ல அன்றாட நிகழ்ச்சிகளையே நகைச்சுவை உணர்வுடன்தான் அணுகுவார். ஏதாவது வேடிக்கையாகச் சம்பவங்களை ஜோடித்து நண்பர்களை அதில் இழுத்துவிட்டு, வேடிக்கை பார்ப்பார். ஒருநாள் மாலை எடிட்டருக்கு நாடகம் இருந்தது. அன்று, ஆனந்தி பிலிம்ஸ் வேணுச் செட்டியாரும் எடிட்டருடன் காரில் நாடகத்திற்குச் சென்றார். வேணுச் செட்டியாரை எடிட்டரின் நாடக நண்பர்களுக்கெல்லாம்கூட நல்ல பழக்கம்.

எடிட்டருடைய விவேகா ஃபைன் ஆர்ட்ஸ் நாடகக் கம்பெனியின் மேனேஜர் எடிட்டரின் பால்ய கால நண்பர். நல்ல மனிதர். ஆனால், குழந்தைத்தனமான சில சபலங்கள் அவரிடம் உண்டு. இது எல்லோருக்குமே தெரியும். அன்று நாடகம் நடந்து கொண்டிருக்கும் போது, வேணுச் செட்டியாரிடம் எடிட்டர் தனியே, "செட்டியார், நாம நாடகம் முடிஞ்சு கௌம்பறப்ப நீங்க காரை விட்டே கீழே இறங்காதீங்க. மேனேஜர் ஏதாவது சொல்லிக் கழற்றிவிடப் பார்ப்பான். எதுக்கும் மசியாதீங்க" என்று சொன்னார். வேணுச்செட்டியார், "நீங்க சொல்லிட்டீங்கள்ளா, நான் பார்த்துக்கிறேன்" என்று தலையை ஆட்டிச் சம்மதம் தெரிவித்துவிட்டார்.

இதுபோல் மேனேஜரையும் தனியே அழைத்து, "டேய், இன்னிக்கு நுங்கம்பாக்கத்திலே ஒரு எடத்திலே ப்ளூ பிலிம் போடறாங்கடா" என்றார். மேனேஜருக்கு எடிட்டரை சிறுவயது முதலே தெரியும். அவர் தான் நடித்த படங்களையே பார்க்க மாட்டார். இதெல்லாம் மேனேஜருக்கு தெரிந்திருந்தும் ப்ளூ பிலிம் என்றதும் அவரைப் பரபரப்பு தொற்றிக்கொண்டது. "எப்போ சோ?" என்று ஆர்வத்துடன் கேட்டார். "நாம ட்ராமா முடிஞ்சு போறப்ப உன்னை அங்கே விட்டுடறேன்" என்றார் எடிட்டர். மேனேஜருக்குத் தலைகால் புரியவில்லை.

நாடகம் முடிந்ததும் மேக் அப்பைக் கலைத்துவிட்டு எடிட்டர் புறப்பட்டார். எடிட்டர் கேட்டுக் கொண்டபடி வேணுச்செட்டியாரும் அவருடன் காரில் ஏற வந்தார். மேனேஜர், "செட்டியார், நீங்க, நீலுகூட அவன் காரிலே போங்களேன்" என்றார். வேணுச்செட்டியார் பின் ஸீட்டில் ஏறி உட்கார்ந்து கொண்டே, "நான் மாம்பலம்தான் போகணும், சார் கூடவே வர்றேன்" என்று சொல்லிவிட்டார். மேனஜருக்கு வேணுச்செட்டியார் மீது கடும் கோபம்,



முள்ளும் மலரும் படப்பிடிப்பில் பாலுமகேந்திரா, மகேந்திரன், ஷோபா, படாபட் ஜெயலட்சுமி

எரிச்சல். மேனேஜர், எடிட்டருக்கு அருகே முன் இருக்கையில் அமர்ந்துகொண்டார். எடிட்டர் காரை ஓட்டினார். ராஜா அண்ணாமலை மன்றத்திலிருந்து கார் புறப்பட்டது.

மேனேஜருக்கு இருப்புக் கொள்ளவில்லை. வேணுச்செட்டியார் சாலையை வேடிக்கை பார்த்துக் கொண்டே வந்தார். உள்ளூர அவர் மேனேஜர் படும்பாட்டைப் பார்த்து ரசித்திருக்க வேண்டும். ஜி.ஹெச். அருகே அந்தக் காலத்தில் டாக்ஸிகள் நிற்கும். அங்கே வந்ததும், "சோ காரை நிறுத்து. செட்டியார் டாக்ஸியிலே வீட்டுக்குப் போகட்டும்" என்றார். எடிட்டர் மெல்லிய முறுவலுடன் காரை நிறுத்தினார். பின்னால் இருந்த வேணுச்செட்டியாரிடம், "செட்டியார், நீங்க டாக்ஸியிலே போயிருங்க. நானும் சோவும் ஒரு வேலையா அவசரமாப் போயிட்டு இருக்கோம். எறங்குங்க" என்றார் மேனேஜர்.

வேணுச்செட்டியாரா இறங்குவார்? "மேனேஜர் சார், அதுதான் நான் சொன்னேன் அல்லவா? எனக்கு எந்த அவசரமும் இல்லை. நீங்களும் சோ சாரும் வேலையை முடிச்சுட்டுவாங்க. நான் காரிலேயே இருக்கேன்" என்றார்.

அதற்குமேல் மேனேஜரால் பொறுக்கமுடியவில்லை. கோபமும் எரிச்சலும் வந்தது. எடிட்டரிடம், "எல்லாம் நீ குடுக்கிற எடம் சோ. காரை விட்டு இறங்குவேனான்னு பிடிவாதம் பிடிக்கிறாரே" என்று சத்தம் போட்டார்.

எடிட்டர், "ஏண்டா, அவர் இருந்தா உனக்கென்னடா? அதான் கார்லேயே இருக்கேன். நீங்க போயிட்டு வாங்கன்னு சொல்றாரே" என்றார். வாயைப் பொத்திக்கொண்டு வேணுச் செட்டியார் சிரிப்பதை, கண்ணாடியின் வழியாக எடிட்டர் பார்த்தார்.

"செட்டியார் உங்களைப் பார்க் ஸ்டேஷன்லே இறக்கி விடுவோம். அங்கே இருந்து மாம்பலத்துக்கு ரயில்லே போங்க" என்று கறாராகச் சொன்னார் மேனேஜர்.

"ஏண்டா, அவர் பாட்டு வர்றார், உனக்கு என்னடா?" என்றார் எடிட்டர்.

"ஆமாண்டா, உனக்கு எல்லாத்தையும் வௌக்கமாகச் சொல்லணும்?"என்று எடிட்டரிடம் அலுத்துக்கொண்டார், மேனேஜர். பார்க் ஸ்டேஷன் அருகே கார் வந்தது. காரை நிறுத்தச் சொல்லிவிட்டு, கதவைத் திறந்து கீழே இறங்கினர் மேனேஜர். பின் கதவை அவரே திறந்தார். உள்ளே இருக்கையில் உட்கார்ந்திருந்த வேணுச் செட்டியாரின் கையைப் பிடித்து இழுத்தார். வேணுச்செட்டியார் இறங்க முடியாதென்று திமிறினார். எடிட்டர் நமட்டுச் சிரிப்புடன் அதை ரசித்துக் கொண்டிருந்தார்.

வேணுச்செட்டியாரைப் பார்த்து, "சனியன் சனியன்" என்று சத்தம் போட்டார் மேனேஜர். இத்தனைக்கும் மேனேஜர் எல்லோரையுமே மரியாதையாக நடத்தக் கூடியவர்தான். வேணுச்செட்டியாருடன் அவருக்கு பல வருடங்கள் பழக்கம். ஆனால், அந்த ப்ளூ பிலிம் அவருக்குள் புகுந்துகொண்டு படாதபாடு படுத்தியது. நல்ல நண்பரையே 'சனியன்' என்று திட்டுகிற அளவுக்குக் கொண்டு வந்துவிட்டது. இதற்கு மேலும் இந்த விளையாட்டை நீடித்துக் கொண்டு போனால் விபரீதமாகிவிடும் என்று நினைத்த எடிட்டர், வேணுச்செட்டியாரிடம், "என்ன செட்டியார்! உள்ளதைச் சொல்லிவிடலாமா?" என்று கேட்டார்.

"அதுதான் இவ்வளவு நாள் பழகுன என்னையே திட்டுற அளவுக்குப் போயிட்டாரே, பாவம்."

"ஏண்டா மடையா கார்லே ஏறு" என்றார் எடிட்டர், மேனேஜரைப் பார்த்து. கோபத்தோடு காரில் ஏறி, காரின் கதவைப் படாரென்று சாற்றினார் மேனேஜர்.

"ஏண்டா ப்ளூ பிலிம் பார்க்கிற வயசாடா ஒனக்கு? நான் நடிச்ச படத்தையே நான் பார்க்குறதில்லைன்னு உனக்குத் தெரியும். உனக்குப் புத்தி வேண்டாம்? ப்ளு பிலிமாவது, மண்ணாங்கட்டியாவது? சும்மா வேடிக்கைக்குச் சொன்னா அதை நம்பிடறதாடா?"

"இல்ல சோ! நீ சொன்னதுனாலேதான் நம்பினேன் சோ" என்றார் மேனேஜர்.

"நான் சொன்னா உடனே அதை நம்பிடணுமா? ஒனக்கு அறிவு எங்கே போச்சு?"

"சோ சார் அவர் ரொம்ப வெகுளி சார்! பாவம்" என்றார் வேணுச் செட்டியார்.

வேணுச்செட்டியார் தயாரித்த படம்தான் 'முள்ளும் மலரும்'. மகேந்திரன் படத்தை இயக்கியிருந்தார். ரஜினிகாந்த் ஹீரோ. மகேந்திரனுக்கு அவர் இயக்கத்தில் வெளிவரும் முதல் படம். மகேந்திரன் 'துக்ளக்' பத்திரிகையில் பணியாற்றும் போதே வேணுச் செட்டியாரைப் பழக்கம். அந்த நட்பில்தான் 'முள்ளும் மலரும்' படத்தை மகேந்திரனே இயக்கினார்.

தி.நகர் ராஜகுமாரி தியேட்டரில் 'முள்ளும் மலரும்' ரிலீசானது. படத்தைப் பார்த்து விமர்சனம் எழுதுவதற்காக நானும் அனந்த கிருஷ்ணனும் மதலையும் ராஜகுமாரி தியேட்டருக்குச் சென்றோம். காலை 10.30 மணிக் காட்சி அப்போதுதான் முடிந்திருந்தது. நாங்கள் பால்கனி ஸீட்டுக்கு டிக்கெட் வாங்கிக்கொண்டு மாடிபடிகளில் ஏறினோம்.

எங்களுக்கு எதிரே மாடியிலிருந்து இறங்கிக் கீழே வந்து கொண்டிருந்த வேணுச் செட்டியார், "போங்க சார்! தியேட்டரே காற்றாடுது!படம் எடுத்திருக்கானாம் படம்!" என்று யாரையோ திட்டுகிற மாதிரி, மகேந்திரனைச் சத்தம் போட்டுக்கொண்டே படியிறங்கினார். "ஏன் செட்டியார் படம் நல்லா இல்லையா?" என்று அனந்த் கேட்டார். "அதான் பாத்தீங்கள்ளே? கூட்டமே இல்லை" என்று வயிற்றெரிச்சலுடன் சொல்லிக்கொண்டே போனார்.

ஆனால், படம் நன்றாக இருந்தது. படம் பார்த்த எங்களுக்குப் பிடித்திருந்தது. படத்தைப் பாராட்டி விமர்சனம் எழுதினோம். முதல் இரண்டு, மூன்று நாட்கள்தான் கூட்டமில்லை. ஆனால், பிறகு படம் 'ஓஹோ' வென்று ஓடியது. 100 நாட்களுக்கு மேல் பட்டிதொட்டியெங்கும் ஓடி, ரஜினிகாந்துக்கும் மகேந்திரனுக்கும் புகழ் சேர்த்தது. அதன் பிறகு வேணுச்செட்டியாரைப் பார்த்தபோது, அவருக்கு ஒரே சந்தோஷம்.

(தொடரும்)

வண்ணநிலவன் <ramachandran.u49@gmail.com>

## அன்புடன் ஆசிரியருக்கு...

செப்டம்பர் மாத 'அம்ருதா' இதழில் வண்ணநிலவனின் வாழ்க்கைச் சரிதக் கட்டுரையில், மேற்கோள் காட்டப்பட்டுள்ள, 'ஆவீன' எனத் தொடங்கும் பாடலில், 'ஆகத் தடியான் மெய் நோக' என்று ஒரு வரி காணப்படுகிறது. அது 'அகத்தடியாள்' என்றிருந்திருக்க வேண்டும். அதாவது மனைவி. பால்மாறிவிட்டார் வண்ணநிலவன்!

அந்தப் பாடலில் இல்லாத வரி ஒன்றையும் சேர்த்திருக்கிறார். அது 'சொல்லிவொனா விருந்து வர'. அந்தப் பாடலில் விருந்து வரவே இல்லை. அதேபோல கட்டுரையில் பாடலும் தவறான இடத்தில் முடிகிறது.

*ஆவீன மழை பொழிய இல்லம் வீழ*
*அகத்தடியாள் மெய்நோவ அடிமை சாவ*
*மாவீரம் போகுதென்று விதை கொண்டோட*
*வழியிலே கடன்காரர் மறித்துக் கொள்ளக்*
*கோவேந்தருழுதுண்ட கடமை கேட்கக்*
*குருக்கள் வந்து தட்சணைக்குக் குறுக்கே நிற்கப்,*
*பாவாணர் கவிபாடிப் பரிசு கேட்கப்*
*பாவி மகன் படுந்துயர் பார்க்கொணாதே.*

இதுதான் சரியான பாடல். இது விவேக சிந்தாமணிப் பாடல். விவேக சிந்தாமணியை எழுதியது யார் என்று தெரியவில்லை. சீவக சிந்தாமணியோடு குழப்பிக்கொள்ளும் சிலர் அதை எழுதியது திருத்தக்கத் தேவர் என்று சில கட்டுரைகளில் குறிப்பதுண்டு. ஆனால் யார் எனத் தெரியவில்லை என்பதே உண்மை.

வண்ண நிலவன் அதை 'ராமச்சந்திர கவிராயர்' எழுதியதாகக் கண்டுபிடித்திருக்கிறார் (அவர் தன்னைச் சொல்லிக்கொள்கிறாரோ?) அது தனிப்பாடல் என்கிறார்.

வாழ்க்கைச் சரிதம் உண்மையாக இருக்க வேண்டும் என எதிர்பார்ப்பது நியாயம்தான். அதற்காக, இன்னார் காபி கொடுத்தார், இன்னார் விருந்து சமைத்துப்போட்டார் என்பதெல்லாம் தமிழ் கூறும் நல்லுலகிற்குத் தேவைதானா?

பாரதி விஜயம் சர்ச்சையும் தேவைதானா? ஆனால், சிறுபத்திரிகைகளின் இலக்கணமே தனிமனிதப் பூசல்கள்தானே?

**- பெயர் குறிப்பிட விரும்பாத வாசகர்**

தனது தொடரின் வளர்ச்சியில் வண்ணநிலவன் இந்த மாதம் தன் தந்தையின் மரண நாட்களை நினைவு கூர்ந்திருக்கிறார். வண்ணநிலவன் கடந்து வந்த பாதை மிகக் கடினமானது. அது போன்ற பாதைகளில்தானே மனிதம் உயிர்கொள்கிறது.

எத்தனையோ மரணங்கள் இது போலப் பார்த்ததுண்டு, எத்தனையோ விபத்துகளை இதுபோலக் கண்டதுண்டு. ருத்ரய்யாவைப் பற்றியே கூட வண்ணநிலவன் பேசியும் எழுதியும் தெரிந்துகொண்டதுண்டு, இருந்தாலும் அலுக்கவில்லை. மனிதர்களின் முகங்கள் ஒரு நாளும் அலுப்பதில்லையே. அதுபோலத்தான் வண்ணநிலவன் எழுத்தும். எனினும், விம்மலோ விக்கலோ இல்லாமல் இந்தப் பதிவைக் கடப்பது கடினம்தான்.

கனத்த பாரத்தைக் கடத்திவிட்டீர்கள். எழுத்தால் ஆளை அசைக்கிறீர்கள் வண்ணநிலவன்.

**-கிருஷ்ண பிரபு** (முகநூலில்)

# குரூரமான அபூர்வங்கள்

மண்குதிரை

சீரும் தளையும் அறுக்கப்பட்ட வடிவம்தான் புதுக்கவிதைக்கான முதன்மையான இலக்கணம் என அதன் முன்னோடியான க.நா.சுப்பிரமணியம் முன்மொழிந்தார். ஆனால், பாரதிக்குப் பிறகான புதுக்கவிதையின் மற்றொரு கிளையாக இருந்த ந.பிச்சமூர்த்தியின் அபிப்ராயம் மாறுபட்டு இருந்தது. அவர் மரபின் அலங்காரங்களைத் தக்கவைக்க விரும்பினார். க.நா.சு. முன்மொழிந்த மரபற்ற தன்மையைத்தான் இன்று புதுக்கவிதை தன் இலக்கணமாகச் சுவீகரித்துக் கொண்டுள்ளது. ஆனால், இன்றைய நவீன கவிதையின் முகம் மாறியிருக்கிறது. பிச்சமூர்த்தியும் க.நா.சு.வும் முரண்பட்ட மையத்திலிருந்து அது முளைத்தெழுந்திருக்கிறது. இந்த இடத்தில் வெய்யிலின் கவிதைகளை வைத்துப் பார்க்கலாம்.

வெய்யிலின் கவிதைகளுக்கு பிச்சமூர்த்தி முன்மொழிந்த மரபின் ஓர்மை உண்டு. அதன் சந்தங்களை நாட்டார்வழக்கின் சந்நதமாக அவர் கவிதையில் நிகழ்த்திக் காட்டுகிறார். நிகழ்வதற்கு வாய்ப்பற்ற ஒன்றைக் கவிதைக்குள் சிருஷ்டிப்பதன் மூலம் அவர் க.நா.சு.வின் விநோதத்தையும் கொண்டுவர முயல்கிறார். அவரது கவிதைகளுள் சில, அலங்காரம், அசாதாரணம் ஆகிய இந்த இரு அம்சங்களையும் களைந்துவிட்டு, பூரண சுதந்திரத்தையும் எய்திருக்கின்றன. வடிவ ரீதியில் வெய்யில் கவிதைகள் கொண்டுள்ள இந்த அம்சத்தால், அவை வரையறைக் கோட்பாட்டுக்குள்ளிருந்து திமிறுகின்றன.



தொண்ணுறுகள் வரை பெரும்பாலான கவிதைகளை இம்மாதிரியான கோட்பாட்டுக்குள் வரையறுக்க முடியும். தொண்ணுறுகளின் தொடக்கத்தில்தான் இந்தியா உலகமயமாக்கலுக்குள் நுழைகிறது. இந்தச் சமூக நிகழ்வு, தமிழ்க் கவிதையை வெகுவாகப் பாதித்தது. உலகமயமாக்கலால் நெருக்கடிக்குள்ளான வாழ்க்கையை வெவ்வேறுவிதமான வெளிப்படுத்தும் களமாகக் கவிதைகள் பயன்பட்டன. உலகமயமாக்கலின் பாதிப்பு நூதனமானதாக இருந்தது. தீர்மானிக்க முடியாததாகவும் இருந்தன. அதுவரை காத்துவந்த ஒழுக்க நெறிகள், பண்பாடு எல்லாம் கேள்விக்குள்ளாயின. இந்த இடத்தில்தான் கவிதைகளுக்கு ஒரு மூர்க்கம் தேவைப்பட்டது. அதனால், கவிதை எஞ்சிய கட்டுப்பாடுகளையும் தகர்த்து எறிந்தது. அதற்காக அவை எல்லாம் உலகமயாக்கலுக்கு, நகரமயமாக்கலுக்கு எதிரான கவிதைகள் எனக் கொள்ளமுடியாது. ஆனால், அதுதான் நிமித்தமாகச் செயல்பட்டது என்பதைத் திடமாகச் சொல்லமுடியும். அதன் வழியே பலதரப்பட்ட மக்களின் குரல் கவிதைக்குள் ஒலிக்கத் தொடங்கின. இந்தக் காலகட்டத்தில்தான் அதற்கு முன்பு வரை கவிதைகளில் ஆதிக்கம் செலுத்திவந்த தனிமன வெளிப்பாடு குறைந்து சமூக மனம் வெளிப்படத் தொடங்கியது. வடிவ ரீதியில் கவிதை தனது அசாதாரணத்தைத் தளர்த்திக்கொண்டது. மாறாக மூர்க்கம் அடைந்தது. இதன் தொடர்ச்சியாக வெய்யிலின் கவிதைச் செயல்பாட்டை அணுக வேண்டும்.

தொண்ணுறுகளில் தொடங்கிவிட்ட உலகமயமாக்கல் என்ற சமூக நிகழ்வின் பாதிப்பு இரண்டாயிரத்திற்குப் பிறகு தீவிரமடைகிறது. வெய்யிலும் அப்போதுதான் கவிதைகள் எழுதத் தொடங்குகிறார். அதன் விநோதமான பாதிப்புகள்தாம் அவரது கவிதையின் பாடுபொருள்களாக ஆகின்றன. குடிநீர் விற்பனைக்கு வந்துவிட்டதைச் சொல்லி வெய்யிலின் கவிதை ஒன்று விசனப்படுகிறது. தூக்க மாத்திரைகள், பொக்லைன் எந்திரங்கள், வற்றும் ஜீவ நதி ஆகியவை எல்லாம் இந்தச் சமூக நிகழ்வின் பாதிப்புகளாகக் கவிதைக்குள் வருகின்றன. மருத்துவம் ஒரு தொழிலாக வளம் பெற்றிப்பதையும் வெய்யிலின் கவிதைகளில் காண முடிகிறது. சம்சாரியின் வீடு மாத்திரை, மருந்துகளால் நிறைந்து கிடக்கிறது.

இந்த அம்சத்தில் லஷ்மி மணிவண்ணன், யவனிகா ஸ்ரீராம் ஆகியோரை வெய்யிலுடன் ஒப்பிட்டுப் பார்க்க முடியும். யவனிகாவின் அந்நியத்தன்மை இன்றைக்குப் பெரும்பாலான கவிஞர்களைப் பாதித்திருக்கிறது. அந்தளவுக்கு மணிவண்ணனின் கூர்மையும் அசாதாரணமும் இன்றைய கவிஞர்களைப் பாதிக்கவில்லை. இன்றைக்குள்ள கவிதைகள் பெரும்பாலானவை யவனிகாவிலிருந்து வேர் பிடித்துள்ளன. அவற்றுக்கு தமிழ்ப் புதுக்கவிதை மரபுடன்கூடத் தொடர்பில்லை. ஆனால், வெய்யில் கவிதைக்கான மையமாக இந்த மூன்று அம்சங்களும் உள்ளன. பாடுபொருளின் தீவிரம் கூடியிருக்கும் கவிதைகளுக்குள் வெய்யில் அசாதாரணத்தைத் திணிப்பதில்லை. அதன் போக்கில் சுதந்திரத்தைத் தருகிறார். ஆனால், கூர்மை, அவரது கவிதைகளில் திடமாகத் தொழிற்படுகிறது.



அரசியல், தொடக்க காலத்திலிருந்தே கவிதையில் தொழிற்பட்டு வந்துள்ளது. ஆனால், தொடக்கத்தில் கவிதைகள் அரசியலின் பாகமாகத் தங்களைக் கருதிக்கொண்டதில்லை. இதை ‘கரும்புத் தோட்டத்திலே’ என்ற பாரதியின் வரிகளுடன் ஒப்பிடலாம். அல்லது இயக்கம் சார்ந்த கூக்குரலாக வெளிப்பட்டன. ஆனால், நிலத்தை, மரங்களை, கால்நடைகளை இழந்த சம்சாரியின் குரல்கள் அதற்குப் பிறகுதான் நேரடியாக வெளிப்பட்டன. அப்படியான குரல்களுள் ஒன்று வெய்யிலினுடையது.

தொழிற்சாலை கன்வெயர் பெல்ட்டில் காத்திருக்கும் தொழிலாளியாக, நிலத்தை இழந்த சம்சாரியாக, வாழ்க்கைப்பாட்டை இழந்த ஒரு நாட்டார் கதை சொல்லியாக, எனப் பல நிலைகளில் கவிதைக்குள் ஓர் அங்கமாக வெய்யில் வருகிறார். அதனால், இயல்பாக அவருக்கும் வெளிப்பாட்டுக்குமான இடைவெளி கவிதைகளில் இல்லை. இந்த இடத்தில்தான் கவிதைக்குரிய லட்சணங்களாக முன்னிறுத்தப்பட்ட சில அம்சங்களை வெய்யிலின் கவிதைகள் புறக்கணிக்கின்றன. அல்லது திட்டமிட்டு உருவாக்கவில்லை எனலாம். மறைபொருளையோ அசாதாரணத்தையோ வாசக அனுபவத்தைக் குறிக்கோளாகக் கொண்டு வெய்யில் உருவாக்கவில்லை. ஆனால், திறந்த சொற்களுடன் முன்னேறும் கவிதையில் கூர்மையான உருவகத்தை உருவாக்கிக் காட்டுகிறார். அதிலே கவிதை பிரம்மாண்டமாக எழுந்துவிடும் அனுபவம், வாசகனுக்குக் கிடைக்கிறது. ஆனால், தன் தொழில் அதுவல்ல எனக் கவிதையைத் தொடர்கிறார்.

‘பாட்டாளிகளின் சூதாட்டம்’ என்ற கவிதையில் கன்வெயர் பெல்ட்டுடன் காலத்தைக் கழிக்கும் ஒரு தொழிலாளியாகக் கவிதையைச் சொல்கிறார். கன்வெயர் பெல்ட்டுகள் வல்லமையுடன் அவனை இயக்கின்றன. அவற்றிடமிருந்து விடுதலைபெற்று வீடு திரும்பும் அவன், தார்ச்சாலையை நீண்ட கன்வெயர் பெல்ட்டாகக் கற்பனைசெய்கிறான். அதில் ஒரு








சாதனமாக அவன் நடந்துபோகிறான். கன்வெயர் பெல்ட், ஆலை எல்லாவற்றிலிருந்தும் விடுபட்டு வீட்டுக்கு வந்து உறங்குகிறான். இந்த இடத்தில் வெய்யில், 'ஒரு கடல் நாகம் எல்லையின்மையின் அமைதியில் நீந்துகிறது' என்ற ஒரு உருவகத்தை எழுப்பிக் காட்டுகிறார்.

வெய்யிலின் மொழிப் பிரயோகம் சுயம்புலிங்கம், என்.டி. ராஜ்குமார் ஆகியோரின் கவிதைகளில் வெளிப்பாட்டு மொழியுடன் ஒப்பிடத்தகுந்தவை. சுயம்புலிங்கத்தின் வெள்ளந்தித்தனமும் ராஜ்குமாரின் சந்நதமும் இவரது கவிதைக்குள் விநோதமாகச் சுருண்டு கிடக்கின்றன.

அப்பா தற்கொலை செய்துகொள்ள வாங்கிய பூச்சிமருந்து பாட்டிலில், சாக்குத் தைக்கும் ஊசியால் மூடியில் துளையிட்டு, கோடித்துணித் திரியும் மண்ணெண்ணெயும் கொண்டு, அம்மா ஒரு விளக்கை உருவாக்குகிறார். அதுபோல் பதின் மூன்று விளக்குகள். பதின் மூன்று தற்கொலைகள் (மகிழ்ச்சியான பன்றிக்குட்டி). ஒரு சம்சாரியின் தற்கொலையைச் சொல்லும் இந்தக் கவிதை தாழ்ந்த குரலில் ஒரு முனகலாக வெளிப்பட்டுள்ளது. அதேசமயம் 'என் மூதாதையின்/ திரமான முதுகெலும்பால் செய்யப்பட்ட/ கூடிய அம்பு / பெருந்தாகம் கொண்டிருக்கிறது/ ஞ்மண்டியிடு/ என் வரண்ட பூமியில் ரத்தம் சிந்து' (குற்றத்தின் நறுமணம்)' என்ற கவிதையில் குரலை இறுக்கிக் கட்டியிருக்கிறார். இந்தக் கவிதையின் வடிவமும் பனையேறி உடலைப் போல் முறுக்கேறியிருக்கிறது. அற்புத விளக்குகள் கவிதை, நோய்மையின் தளர்வுடன் இருக்கிறது.

இந்த இரு கவிதைகளுமே சம்சாரியிடமிருந்துதான் வெளிப்படுகிறது. ஒன்று யாதார்த்தத்துக்குச் சிரம் கொடுத்துச் சாய்கிறது. மற்றொன்று யாதார்த்துக்கு மாறாகச் சிரமெடுக்கத் துணிகிறது. வடிவத்திலும் உள்ளடக்கத்திலும் வெய்யிலின் கவிதைகள் இந்த முரண்பாட்டில் இயங்குபவைதாம்.

அவரது கவனம்பெற்ற கவிதைத் தொகுப்பான 'குற்றத்தின் நறுமணம்' என்னும் தலைப்பே ஒருவிதத்தில் அவரது கவிதைகளின் ஆதாரம் எனலாம். குற்றத்தின்பால் அவரது கவிதைகளுக்கு அளவில்லாத ஈர்ப்பிருக்கிறது. குற்ற உணர்வைத் தரக்கூடிய அறத்தின் கழுத்தை ஒரு கவிதையில் அறுத்துவிடுகிறார். கை, கால்கள், அடிவயிறு, தசை, இருதயம் என உடலின் மற்ற பாகங்களும் வன்முறைக்கு உள்ளாக்கப்படுகின்றன. இவையெல்லாம் குற்றத்தின் பொருட்டு கவிதைக்குள் நடக்கின்றன. ஆனால், இவை சமூகப் பின்புலத்துடன் ஆராயப்பட வேண்டியவை என்பதைத் தன் கவிதைகள் மூலம் சொல்கிறார் வெய்யில்.

காமமும் குற்றத்தின் அம்சமாக வருகிறது. சேரனின் கவிதைகளின் காமத்தைப் போல் வன்முறையாக, வாதை தருவதாக வெளிப்பட்டுள்ளது. கைக்கிளை, பெருந்திணை, காரைக்கால் அம்மையார், கண்ணகி எனக் காமத்தைப் பிரயாசையுடன் பலவிதமாக அடையாளப்படுத்த முயல்கிறார் வெய்யில். அதுபோலக் காமத்தை வெய்யிலின் கவிதைகள் புனிதமானதாக, வேதாந்த ரகசியமாகப் பார்க்கவில்லை. 'கஞ்சா புகைக்கும்போது ஏற்படும் மூளைச் சுர்' எனத் தன் உசரத்துக்கு அதை வளைத்துப் பார்க்கிறது. அவரது இந்தக் காமத்திற்குக் குற்றவுணர்வும் கள்ளத்தனமும் உண்டு.

ஒருவிதத்தில் பார்த்தால் பாவமான யதார்த்தைக் கவிதைக்குள் மீண்டும் மீண்டும் நிகழ்த்துவதை வெய்யிலின் கவிதைகள் விரும்பவில்லை. ஒரு மந்திரவாதியைப் போல் யதார்த்திற்கு மாறான குரூரமான அபூர்வங்களைக் கவிதையின் மூலம் நிகழ்த்த முயல்கிறார். கவிதைக்குள்ளிருக்கும் ஈர்ப்பூட்டும் கொலைகள், குருதி சொட்டும் ஒரு புரட்சி, கைகூடாக் காமங்கள் என எல்லாம் அந்தப் பிரயாசைகளின் வெளிப்பாடுகள் எனலாம். ●

மண்குதிரை <mankuthirai@gmail.com>

**••• அம்ருதா பதிப்பக வெளியீடுகள் •••**




**விலை ரூ.80-.00**




**விலை ரூ.110-.00**




**விலை ரூ.170-.00**




**விலை ரூ.100-.00**




**விலை ரூ.90-.00**




**விலை ரூ.130-.00**




**விலை ரூ.140-.00**




**விலை ரூ.80-.00**

**அம்ருதா பதிப்பகம்**

1, கோவிந்த ராயல் நெக்ஸ்ட்
அடுக்ககம்
12, இரண்டாவது தெரு
மூன்றாவது பிரதான சாலை
சி.ஐ.டி.நகர் கிழக்கு
நந்தனம்
சென்னை 600035

அலைபேசி:
**94440 70000**

# கரிசல் காட்டில் ஒரு மெய்யப்பன்

சூரங்குடி அ. முத்தானந்தம் ஓவியம்: ராஜ்குமார் ஸ்தபதி

கடும்கோடை, கட்டக்கட்ட உச்சி நேரம். கரிசல் காட்டில் கானல் நீரின் வெள்ளோட்டம். அந்த வருசம் பெய்த புயல் மழையால் 'கெத்துக் கெத்'தென்று கிடக்கும் பெரிய்ய ஊருணிக் கரையில் நாள்பட்ட விசாலமான ஆலமரம். இத்துப் போய் அறுந்து துண்டு துண்டுகளாக விட்டத்தில் தொங்கும் பழைய உழவு வடங்கள் மாதிரி விழுதுகள். தரையைத் தொட்டு நிற்கும் விழுதுகளில் சாய்ந்தபடி, ஊர்ப் பெரியவர்கள் சிலர் திறந்த மேனியோடு உட்கார்ந்திருந்தார்கள். அந்த ஊருணியில் ததும்பி நிற்கும் தண்ணீரிலிருந்து 'ஜிகு, ஜிகு' வென்று வரும் குளிர்ந்த காற்றும் ஆலமர நிழல் தரும் இதமான சுகமும் அவர்களைச் சொக்க வைத்தது. ஊர்க்கதை, உலகக் கதைகளை நாவுக்கு ருசியாகப்பேசி மனச் சுகம் அடைந்திருந்தார்கள். இருந்தவர்களில் ஒருவர் இயல்பாகத் தன் பார்வையை வடக்கு முகமாக வைத்திருந்தார்.

வடதிசையிலிருந்து வண்டிப் பாதை வழியாக, சுட்டுப் பொசுக்கும் வேணா வெயிலில், காலில் செருப்புக் கூட இல்லாமல் ஓர் இளம் வயசுக்காரன் வந்து கொண்டிருந்தான். அழுக்கேறிய வேட்டி. தலையில் சாயம் போன துண்டு. 'கேது பூது' என்ற தவிப்போடும் வேர்த்து விறுவிறுத்த களைப்போடும் வந்த அவன் மரத்தடிக்கு வந்து நின்றான். ஒருவர், அவனை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, , "தம்பிக்கு எந்த ஊர்? என்ன விசயமா இந்த ஊருக்கு வந்தீளோ?" என்று கேட்டார்.



ஊரையும் அந்த ஊருக்கு வந்திருக்கும் காரணத்தையும் சொன்னான், தாழ்ந்த குரலில்.

யோசித்தபடி இருந்த அவர், தலையை மேலும் கீழுமாக உடம்போடு சேர்த்து அசைத்துக் கொண்டு, "இந்த ஊர்ல பெத்தப்பெருமாள்ன்னு ஒருத்தர் இருக்கார். ஈரனேர்ச் சம்சாரி. அவரப் போய் நீ பாரு!" என்றார்.

பெத்தப்பெருமாள் வீடு. தற்செயலாக வாசலுக்கு வந்து நின்று கொண்டிருந்தவருக்கு, ரெண்டு கைகளையும் ஒடுக்கமாகச் சேர்த்து வைத்து, பவ்யமாகத் தாழ்மையான ஒரு கும்பிடு போட்டான் அவன்.

அவனது முழு உருவத்தையும் நோட்டமிட்டு, "யாருப்பா நீ? என்ன வேணும்?" தலையை மேலே ஒரு வெட்டு வெட்டிக் கொண்டு கேட்டார்.

அவன் வந்த காரணத்தைப் பணிவோடு சொன்னான்; ரெண்டு கைகளையும் அகல விரித்து ஒன்றன் மேல்ஒன்றாக வைத்துக்கொண்டு கொஞ்சம் நீட்டியபடி, ஏதோ யாசிக்க வந்திருப்பவன் போலிருந்தான்.

"வர்ணாச்சியம் என்ன?" அவருடைய அடுத்த கேள்வி. அவன் தன் சாதியைச் சொன்னான்.

"நம்ம புள்ளையாண்டன் தானா?" இடுப்புக்கு மேலே உள்ள உடம்பை வலது பக்கமும் இடது பக்கமுமாக அசைத்துக்கொண்டு தனக்குத்தானே சொல்லிக் கொண்டார். அந்த அசைப்பில் சந்தோசம் வெளிப்பட்டது. வீட்டுக்குள் வரச் சொல்லித் தாழ்வாரத்தில் கிடந்த பெஞ்சுப் பலகையில் உட்காரச் சொன்னார்.

இரண்டு கால்களையும் சேர்த்து வைத்தும் ரெண்டு கைகளையும் விரித்துத் தொடையில் வைத்தும், போட்டாப் புடிக்க இருப்பது போல் முகத்தை நேராக வைத்து ஒடுங்கி உட்கார்ந்திருந்தான்.

முன்னால் நாற்காலியில் அவர் ஜமீன்தார் மாதிரி, வந்திருந்தவனின் முகத்தைப் பார்த்தவாறு, "எங்கிருந்து வர்றப்பா? பேர் என்ன?" சாதாரணமாகக் கேட்டார்.

ஊரைச் சொல்லிவிட்டு, "பேர் மெய்யப்பன்" என்றான். உடம்பைச் சற்று மேலே தூக்கியபடி.

"பொய்யே சொல்ல மாட்டயோ?" உயர்ந்த ரசமான நகைச்சுவை ஒன்றை உதிர்த்தவர் போல மகிழ்ந்து குலுங்கிக் குலுங்கிச் சிரித்துக் கொண்டார்.

"ஒனக்கு என்ன வயசு ஆகுது?"

"முப்பது."

"பெத்தவங்க?"

"நான் சின்ன வயசா இருக்கும் போதே போய்ச் சேந்துட்டாங்க."

"சொந்த ஊர்ல சொத்துச் சொகம்? சொந்த பந்தங்க?"

"அவங்க இருந்து என்ன பண்ண? சாணி போடவா? ஏங் குரங்கேன்னு கேக்க நாதி இல்ல, இருந்தா நாலு பேரப் போல இருக்கணும்!"

"இதுக்கு முன்னால எங்க வேல பாத்தெ?"

"எங்க ஊர்ல அஞ்சு ஏர்ச் சம்சாரித்தனம்



நடக்குற ஒரு வீட்டுல. சின்ன வயசுலேயிருந்தே விவசாய வேலைகளப் பாத்தேன். ”

“சாப்பாட்டு விவரங்களெல்லாம் எப்படி?”

“ரெண்டுவேள கம்மங்கஞ்சி, ராத்திரிக்குக் கூப்பங்கடை( ரேஷன் கடை) அரிசிச்சோறு.”

“சம்பளம் சாவடியெல்லாம்?”

“இதுவரை, என் சம்பளத்த நான் கண்ணாலெ கண்டது கிடையாது.”

“ஒன்னயெ வீட்டு மாப்பிளயின்னு நெனைச்சிருப்பாகளோ!” எல்லாப் பற்களும் தெரிய இளித்துக் கொண்டார்.

அந்த வீட்டுல அவன் என்னென்ன வேலையெல்லாம் பாப்பான் என்ற விபரம் அவருக்குத் தெரிய வேண்டியிருந்தது. அவன் ஒரு ஏருக்கு உழவுக்குப் போவான். தொழுவுல உள்ள சாணிசகதிகளை அள்ளிக் கூடை கூடையாச் சுமப்பான். பானை, பானையாகத் தண்ணி எடுப்பான். பருத்தி விதை ஆட்டி, மாடுகளுக்குத் தண்ணி காட்டுவான். கூளம் முறித்துக்கொண்டு வந்து வைப்பான்.

“இதுபோக அத்தம் தொத்தம் வேலக எல்லாம் என் தலையிலதான்!”

“துணி மணி சமாச்சாரங்க?”

“எப்போவாவது ஒரு சோடி வேட்டியும் ரெண்டு துண்டும் எடுத்துக்குடுப்பாக. அது கிழிஞ்சு கந்தலாப் போனா, அடுத்த வேட்டி துண்டு.”

“படுக்க வைக்க எடம்?”

மெய்யப்பன் மாட்டுத் தொழுவுலதான் படுத்தான். மாடுகளுக்கு அப்பப்போ கூளம் அள்ளிப் போடணுமே! ஈக்கடிச்சாலும் கொசுக்கடிச்சாலும் தாங்கிக்கொள்ள வேண்டியதுதான். பனிக் காலத்துல குளுரு அடிச்சாலும் வாடைவாட்டி எடுத்தாலும்

குண்டி வேட்டிய அவுத்து மூடிக்கிற வேண்டியதுதான்.

"இப்போ, அந்த வீட்டவிட்டு நீ எதுக்கு வெளியேறி வந்துட்ட?"

"தச கூலிச் செலவு சாஸ்தி ஆகுதுன்னு அஞ்சு சோடி உழவு மாடுகளையும் வித்துட்டு உழவுகார் வாங்கிட்டாக. அதனால கூலிக்காரங்க அஞ்சு பேரையும் வெம்பெறப்பா வெளியே விரட்டி விட்டுட்டாக! 'அம்போ'ன்னு வந்துட்டோம்."

நோய்நொடி இல்லாத திடகார்த்தமான திரேகம். காய்ப்பேறிய கைகள். நடந்து, நடந்து வடிவமே மாறிப்போன பாடம் செய்யப்பட்ட பனை மட்டை போன்ற சப்பட்டைப் பாதங்கள். வெயிலில் அலைந்து, அலைந்து கறுத்துப் போன உடம்பு. வஞ்சகமில்லாத விசுவாசமுள்ள நல்ல உழைப்பாளி. ஒளிபரப்பிக் காட்டும் அப்பழுக்கற்ற மனம் திறந்த பேச்சு!

மெய்யப்பனின் உடம்பை உச்சியிலிருந்து உள்ளங்கால் வரை அக்கு வேறு ஆணி வேறாகப் பிரித்து ஒவ்வொன்றையும் கண்ணில் வெளக்கெண்ணெய்யை ஊற்றிக் கொண்டு அளவெடுத்துக் கொண்டார்.

சுவர்க் கடிகாரத்தைப் பார்த்தார் பெத்தப் பெருமாள்.

மணி ஒன்னு. மத்தியானச் சாப்பாட்டு நேரம்.

"மெய்யப்பா, இது ஈரனேர்ச் சம்சாரித்தனம் நடக்கிற வீடு. ஒரு ஏர்க்கு என் பையன் உழவுக்குப் போவான். இன்னொரு ஏர்க்கு, அஞ்சாறு வருசமாப் போய்க் கிட்டு இருந்தவன், கல்யாணமாகிப் பொண்டாட்டி ஊருக்கு ஊரைவிட்டே போயிட்டான். அவனுக்குப் பதிவாகத்தான் ஒரு ஆளை நான் தேடிக்கிட்டு இருந்தேன்."

பொருத்தமான ஆளாக வந்து வாய்த்தான்.

கையெடுத்துக் கும்பிட்டான் அவன். கண்ணீர் பொங்கிற்று.

"அதுக்குள்ள நீ அவசரப்படாதே! அதுபடி நான் ஒனக்கு ரெண்டு விதமான சோதிப்புகள் வைப்பேன். அந்த ரெண்டு பரீச்சையிலும் நீ பாஸ் பண்ணி ஆகணும். அதுல நீ தேர்ச்சி பெத்துட்டா ஒனக்கு இங்கெ வேல உண்டு. ஒருவேள பெயிலாகிட்டே, நீ வந்த பாதையப் பாத்துப் போக வேண்டியதுதான். ஒனக்குச் சம்மதமா?" கேட்டார் அந்த ஈரனேர்ச் சம்சாரி.

சற்று நேரம் மௌனமாக இருந்தான் அவன். பேச்சு வரவில்லை. 'இங்கும் தனக்கு வேல கெடைக்காமப் போய் விடுமோ?' என்கிற நிச்சயமற்ற தன்மையில், கவலை அவன் மனதின் ஓரிடத்தில் நீட்டி நிமிர்ந்து படுத்துக் கிடந்தது. அதே சமயம், 'இந்தமடம் இல்லாட்டாச் சந்தைமடம்' என்கிற சொலவம் அவன் மனதில் வந்து ஒட்டியதில் ஒரு சின்னத் தெளிவு அவனுள் வந்து நிமிர்ந்து நின்றது.



"என்னப்பா பேசாமலிருக்கெ?" அதற்கும் உதடுகள் பிளக்கவில்லை.

"சரி, அத அப்புறம் பாத்துக்கலாம். நேரம் மதியத்துக்கு மேல் எவ்வளவோ ஆச்சு. பசிநேரம். நீயும் கொளுத்தும் வெயில்ல ரொம்பத் தூரம் நடந்து வந்துருக்கெ. பசி குடலைப் பிடுங்குது, சாப்பிடப் போகலாம் வா!" அவருக்குப் பின்னாலேயே கூச்சத்தோடு நடந்தான்.

சாப்பிடும் இடத்துக்குப் போனதும் வீட்டம்மாவைக் கூப்பிட்டு, "ஏமா, இது நம்ம ஆள்தான். பசியோடு வந்திருக்கான். இவனுக்குச் சோறு வைவி"என்று சொல்லிவிட்டு அங்கு கிடந்த நாற்காலியில் உட்கார்ந்தார் பெத்தப்பெருமாள். அவன் சாப்பிடும் அழகை நோட்ட மிட.

மெய்யப்பன், வட்டச் சம்மணம் போட்டு உட்கார்ந்திருந்தான். தோளில் கிடந்த துண்டு அடிமடிக்கு வந்தது. சாப்பிடும் போது ஏத்தாப்புப் போட்டிருக்கக் கூடாது என்பது அவனுக்குத் தெரியும்.

வேலைக்காரர்களுக்கென வைத்திருக்கும் பெரிய்ய வெண்கலக் கும்பாவை எடுத்துக்கழுவி, அதில் நாலு கைக் கம்மஞ்சோற்றை நிறைய்ய வைத்து, நடுவில் ஒரு பெரிய குழிபண்ணி அது நிறைய்யப் பருப்புக் குழம்பு ஊற்றி, மெய்யப்பனுக்கு முன்னால்க் கொண்டு வந்து வைத்தாள் அந்த அம்மா. தொட்டுக் கொள்ள, ஊறுகாய். மிதுக்க வத்தல், தயிரில் ஊறப்போட்டு வறுத்த மிளகாய் வற்றல், வெங்காயம் கருப்பசாமிக்குப் படைக்கும் படையல் போல.

அஞ்சு நொடியில் ஒரு கும்பாச் சோத்தையும் களக்குக்களக்குன்னு எறி பூசை போட்டது மாதிரிச் சாப்பிட்டு முடித்துவிட்டான் அவன்! இனி மறு சோறு வாங்க வேண்டும். அடுத்த ஒரு கும்பா நிறைய்ய முன்புபோல சோறும் குழம்பும் வந்தன. அதையும் கட்டிகட்டியாக உருட்டிக் குழம்பில் நல்லா முக்கிக் களக்கு களக்கென்று முழுங்கி விட்டான் அவன்!

இன்னும் அவனுக்கு வயிறு நிறைந்தது மாதிரி இல்லை போலும். கும்பாவுக்கு முன்னால் கோயில் வாசலில் உட்கார்ந்திருக்கும் பரதேசி மாதிரி உட்கார்ந்திருந்தான். மூணாவது முறையாக முக்கால்க் கும்பாச் சோறும் ஒரு பெரிய சில்வர் போணி நிறையக் கட்டித் தயிரும் கொண்டு வந்து வைக்கப்பட்டன. அந்தச் சோத்தையும் தயிர்போட்டுப் பிசைந்து ஊறுகாயைத் தொட்டுக் கொண்டு உறுட்டு, உறுட்டென்று

சாப்பிட்டு முடித்தான். அவன் சாப்பிடும் அழகுச் சித்திரத்தைப் பக்கத்திலிருந்து இமை தட்டாமல் பார்த்துக் கொண்டேயிருந்த பெத்தப் பெருமாள்.

"சபாஷ் மெய்யப்பா! நீ முதல் சோதனையில பாஸ் பண்ணிட்டே!" உற்சாகமாகச் சொன்னார் சந்தோச மிதப்பில்!

இருவரும் சாப்பிட்டு முடித்த பின் அதே தாழ்வாரத்துக்கு வந்து உட்கார்ந்தார்கள், மீண்டும்.

மறுமாடு கட்டுகிற நேரம். "தம்பி ஒனக்கு இனி ரெண்டாவது பரீச்சை வைக்கப்போறேன். அதிலேயும் நீ பாஸ் பண்ணினால்தான் பிழைச்ச!" என்றார்.

தாழ்வாரத்தில் கிடந்த கதுமையான கனத்த வெட்டரிவாளைக் கையில் எடுத்துக்கொண்டு வீட்டைவிட்டு வெளியேறினார். இருவரும் அந்த ஆலமரத்தையொட்டியுள்ள ஊருணிக் கரைக்குப் போனார்கள். அங்கு உட்கார்ந்திருந்த பெரிய ஆட்கள் யாரையும் காணோம். மத்தியானச் சாப்பாட்டுக்குப் போயிருக்கலாம்.

பெத்தப் பெருமாள் மெய்யப்பனோடு ஊருணிக்கரை வழியாக மேற்கு முகமாகப் போனார். மடைக் கரைக்குப் பக்கம் போனதும் அந்த இடத்தில் நின்று அவனிடம் சொன்னார். கையை நீட்டியபடி, "ஏப்பா, அதோ தெரியுது பார், பெரிய ஒரு வேப்பமரம். அதுதான் நம்ம பிஞ்சை. ரெண்டு குறுக்கம் மந்தை. அதுல இடுப்பு உயரத்துக்கு நட்டி வச்சது மாதிரி ஒரே மஞ்சனத்திச் செடிக! நிலத்தை அடைத்து நிக்கும் அவைகளை எல்லாம் வெட்டிப் போட்டுட்டு வரணும். இந்தா அருவா. எவ்வளவு சீக்கிரம் முடியுமோ, வேல முடிஞ்ச நேரத்துக்கு நீ வீட்டுக்கு வந்திரலாம்."

"சரி மொதலாளி" என்றவாறு, அரிவாளை வாங்கிக் கொண்டு ஊருணிக் கரை வழியாக அந்தப் பிஞ்சைக்குப் போய்ச் சேர்ந்தான் அவன். கால்க் குறுக்கம் அகலத்துக்கு நிலம் தழுவி நின்ற, அந்தப் பெரிய வேப்பமரத்தைச் சிறிது நேரம் பார்த்துக்கொண்டே நின்றான். பூவும் காயும் சரஞ்சரமாய்த் தொங்குகுதே! இளம் காற்றுக்கு அசையும் கொப்பும் குலையும் வெண்சாமரை வீசுதே. அப்படியே அவனது பார்வை மெதுவாகக் கீழே இறங்கியது. கரிசல் மணம் வீசும் தன்தரை எவ்வளவு சுத்தமாக அழகாக இருக்குது! முதலாளி வீட்டுச் சிமிண்டுத் தாழ்வாரம் தோத்துப் போகும்; பிஞ்சை வேலைக்கு வருபவர்கள் மரத்துத் தூரடியில் வைத்துத்தான் கஞ்சி குடிப்பார்கள் போலிருக்கு. கொஞ்ச நேரம் அந்த இடத்தில் உட்கார ஆவல் கொண்டான்.



குளுமையான வேப்பமர நிழலுக்கும் இதமான காற்றுக்கும் வேணா வெயிலில் வந்த களைப்புக்கும் குரல்வளை வரை மத்தியானம் ஒரு பிடி பிடித்த தீனிக்கும் செத்த சாயலாமே என்று எண்ணி குடங்கையைத் தலைக்கு வைத்து ஒருச்சாய்ந்து படுக்கலானான். கையில் இருந்த அரிவாளைப் பக்கத்தில் போட்டுவிட்டான். அடுத்த கொஞ்ச நேரத்தில் நித்திரைப் பேரழகி அவனைத் தழுவச் செத்த பிணமானான்!

நேரம் சாயந்தரம். சமத்தனின் வேலைமானம் எப்படி என்று பார்த்து வர அந்தப் பிஞ்சைக்குப் போனார் நிலத்துக்குச் சொந்தக்காரர்.

கிடையாகக் கிடக்கும் மெய்யப்பனைச் சற்று நேரம் நின்று பார்த்துக் கொண்டிருந்தவருக்கு கோபம் முட்டிக் கொண்டு வந்தது, 'இல்லிக் கலயத்துக்குச் செல்லத்தப் பாரு: ஏல மாட்டாத கழுதைக்குத் தூக்கத்தப் பாரு' என்கிற சொலவடை நினைவுக்கு வர, அடுத்த நிமிசம் அவர் ஒரு முடிவுக்கு வந்துவிட்டார். 'இவன் ஒப்பேற மாட்டான்; வயிறு வெடிக்கத் திங்கிறதுலதான் குறியா இருந்திருக்கான்! வேலைக்கு வாயக்கில்லாத பய. வீட்டுக்கு வரட்டும் சீட்டக்கிழிச்சுக் குடுத்து அனுப்பிற வேண்டியதுதான். திண்ணிப் பய திண்ணிப் பய, வேலைக்கு வெளங்காப் பய. '

மெய்யப்பனின் முதுகுக்குப் பின்னால்க் கிடந்த அந்த வெட்டரிவாளை குனிந்து எடுத்துக்கொண்டு, அவனைப் பார்த்துக் காறித் துப்பியபடி பிஞ்சையை விட்டு வெளியேறினார் அவர்.

மலை வாயில்ப் பொழுது விழ, இன்னும் செத்த நாளிகை இருந்தது. காட்டு வேலைக்குப் போன ஜனங்கள் ஊருக்குள் வந்து கொண்டிருந்தார்கள்.

மெய்யப்பனும் வந்து பெத்தப் பெருமாள் வீட்டுத் தாழ்வாரத்தில் நின்றான். தாழ்வாரத்தின் ஓர் ஓரத்தில் அந்த வெட்டரிவாள் கிடந்தது. அதைப் பார்த்த பிறகுதான் அந்த அரிவாளின் ஞாபகம் அவனுக்கு வந்தது. திடுக்கிட்டுப் போனான். ஏதோ ஒன்னு நடந்திருக்குன்னு அவனது மனம் அவனுக்குச் சொல்லியது.

வீட்டுக்குள்ளிருந்து தாழ்வாரத்தை நோக்கி வந்து கொண்டிருந்த பெத்தப் பெருமாள், மெய்யப்பனைக் கண்டதும், "என்ன தூக்கம் போயிருச்சா? மஞ் சனத்திச் செடிகளயெல்லாம் வெட்டித் தள்ளி முடிச்சாச்சா?" இளக்காரமாகக் கேட்டார். முகத்தில் கடுகடுப்பு!

"வேல முடிஞ்சுது மொதலாளி." அவன் மிகச் சாதாரணமாக சொன்னான்.

"பொய் சொல்லாதே!"

"அது எங்கிட்டக் கெடையாது மொதலாளி."

"ம்ம்!" திமிரோடு தலையை மேலும் கீழுமாக அசைத்துக் கொண்டார் அவர்.

"..........."

"என்ன மூச்சுடாம நிக்கெ? என்கூட வாறயா பிஞ்சயப் பாத்துட்டு வரலாம்?"

"வாரேன் மொதலாளி."

வேப்ப மரத்துப் பிஞ்சையின் கீழப் பொழியில் நின்று நாலாபக்கமும் பார்வையைச் செலுத்தினார் பிஞ்சைக்காரர். பிஞ்சை இருக்கும் சீரைப் பார்த்துப் பிரமித்துப் போனார். மனசுக்கு நிழல் சரியாத சந்தோசம்! அருகில் நின்ற மெய்யப்பனைக் கனிவோடு ஒரு பார்வை பார்த்துக் கொண்டு அப்படியே சொக்கிப் போனார்.

நிலம் ரொம்பத் துப்புரவா வெகுநேர்த்தியாக, ஒரு குச்சியோ குறுமாலோ இல்லாமல் ஒளிபடர்ந்தது போல பளிச்சென்றிருந்தது! மெய்யப்பன் அந்த நில மகளுக்குக் கறுப்பு வண்ணப் போர்வையை விரித்திருக்கிறான் என்பது போலிருக்க,

"இதெல்லாம் எப்படியப்பா முடிஞ்சது?" என்றார்.



"மொதலாளி, மஞ்சனத்திச் செடிகள அருவாள வச்சு ஒட்ட வெட்டி விட்டாலும் மழை பெய்த உடன் திரும்பவும் அதுக தளிர் எடுத்துச் செடியாகிப் பிறகு மரமாகி, பிஞ்சைய நாசக்காடு பண்ணிரும். அதனாலெ எல்லாச் செடிகளையும் தூர்ப்புடுங்கா வேரோடு புடுங்கிப்போட்டேன். அப்படிப் புடுங்கிப் போட்ட அதுகளையெல்லாம் அந்தச் செடிகள வச்சே கொடி போட்டுச் சின்னச் சின்னக் கெட்டுகளாகக் கெட்டினேன். கைக்கு அடக்கமா இருந்துச்சு. அதை அப்படியே கொண்டு போய் மேலப் பொழிப் பக்கம் அடுக்கி வச்சேன். "

அவன் கை காட்டிய திக்கில் பார்த்தார். மஞ்சனத்திக் கட்டுக்கள் ஜோராக அடுக்கி வைக்கப்பட்டிருந்தேன். மரப்பலகைகளை ஒன்னுக்கு மேல் ஒன்னாக அடுக்கி வச்சிருப்பது மாதரி.

"இனிமே எந்தக் காலத்திலும் இந்தப் பிஞ்சையிலெ, மருந்துக்குக்கூட ஒரு மஞ்சனத்திச் செடியப் பார்க்க முடியாது மொதலாளி."

அப்படியே மெய் சிலிர்த்துப் போய் நின்றார் மொதலாளி; "மெய்யப்பா" அதிசயித்துப் போய்ப் பார்த்தார். ரெண்டாவது பரீட்சையிலயும் நூத்துக்கு நூறு வாங்கி பாஸ் பண்ணிட்டான் இந்த மெய்யப்பன். இனி இந்த இந்த வீட்டில் சாஸ்வதமா வேலையில் இருக்கலாம்.

அவனுக்கு அங்கு வேலை கிடைத்தில் ரொம்ப மகிழ்ச்சி.

"இன்னொரு விசயத்தையும் கேட்டுக்கோ! இந்த ஊர்லயெ ஒனக்கு ஒரு பொண்ணப் பாத்து உன் காலுக்குக் கட்டுப் போட்டு வைப்பதும் என் பொறுப்பு!"

கம்மந்தட்டையின் உச்சியில் ஒரு சிட்டுக்குருவி உட்கார்ந்ததும் அதுலேசாக வளைந்து கொடுப்பதுபோல, மெய்யப்பன் கூச்சத்துடன் தன் உடம்பை வளைத்து, நெளித்து அவரை இருகை கூப்பி வணங்கிக் கொண்டான். ●

**ஒரு திருத்தம்**

சென்ற இதழில் இடம்பெற்ற, பாகிஸ்தான் தேர்தல் குறித்த 'இம்ரான்கானின் வெற்றியின் பின்னணியில் இராணுவம்' என்ற எனது கட்டுரையில், முதலாவது பந்தியில், 'பாகிஸ்தானின் பத்தொன்பதாவது பிரதமராக ஆட்சி அமைத்திருக்கும் இம்ரான்கான்' என்று குறிப்பிடப்பட்டிருக்கும். அது தவறு. 'இருபத்திரண்டாவது பிரதமராக ஆட்சி அமைத்திருக்கும் இம்ரான்கான்' என்பதுதான் சரி.

தவறுக்கு வருந்துகிறேன்.

-சு. கஜமுகன்



# கருணாகரன் கவிதைகள் மூன்று

1

மூன்று நாட்களாக அந்த நிழல்
அப்படியே அசையாமல் கிடக்கிறது
இரவும் பகலும் வந்து போகின்றன
நிழல் அசையவேயில்லை

தெருவில் ஓடிவந்த நாய்
ஒரு கணம் நின்று
நிழலை முகர்ந்து பார்த்து
மோப்பம் பிடித்தது
ஏனோ தெரியவில்லை
இரண்டடி பின்னே நகர்ந்து
தலையை உயர்த்தி வான்னோக்கிக் குரைத்தது
பிறகு, நிழலை நெருங்கி முத்தமிட்டு நக்கியது

கரைந்து நெகிழ்ந்த நிழலிலிருந்து
மெல்லியதொரு நறுமணம் எழுந்து
எங்கும் சூழ்ந்தது

சற்று நேரத்தில்
நிழலைச் சுற்றிப் பெருங்கூட்டம் கூடிப் பெருகியது
கூட்டத்தைக் கட்டுப்படுத்த முடியாத காவலர்கள்
நிழலை அகற்றுவதற்கு
முயன்றனர்

நிழலை விலக்குவதைப் பற்றி ஆலோசனை நடந்தது
ஒளியூட்டுவதன் மூலம்
நிழலை அகற்றலாம் என்றார் தலைமைக் காவலர்
இருளைப் பெருக்கி நிழலை மறைக்கலாம் என்றுரைத்தார்
இன்னொரு அதிகாரி
ஆனாலும் நிழல் விலகாமல் ஒளிர்ந்து கொண்டேயிருந்தது



செய்வதறியாது திகைத்த அரசு
நிழலை அகழ்ந்து புதைக்குமாறு ஆணையிட்டது

அடுத்த கணமே நிழலைச்சுற்றி
அகழ்வுப் பணிகள்
ஆரம்பமாகின



நிழல் அசையவேயில்லை
மேலும் மேலும் ஆழ அகழ்ந்தன இயந்திரங்கள்

அப்பொழுது நிழலின் அடியிலிருந்து
மெல்லக் கசியத் தொடங்கியது ரத்தம்
அந்த ரத்தத்தில்
அப்படியே கரைந்தன அத்தனை கனரக வாகனங்களும்

இன்னும் வாசத்தோடு ஒளிர்ந்து கொண்டேயிருக்கிறது நிழல்.

2
தெருவிலேயே கிடக்கும் அவளின் வரலாற்றை
எழுதிக் கொண்டிருக்கிறார் திரு. கண்ணியமூர்த்தி

அன்று முழுதும் பெய்த மழையில்
அவளுடல் நனைந்தது
அப்படியே வெயிலிற் காய்ந்தது

வரலாற்றுக்குரியவளின் உடலைச்
சூரியனும் வானமும் கண்காணித்துக் கொண்டிருக்க வேண்டுமல்லவா
வானமும் சூரியனும் அறிந்தவளை உலகம் அறியாதிருக்குமா?

அறிந்த உலகம் வியந்தது
வியந்த உலகம் அதிர்ந்தது
அதிர்ந்த உலகம் உறைந்தது
உறைந்த உலகத்துக்குப்
பூக்களால் அலங்கரிக்கப்பட்ட பெண்ணைப் பரிசளித்தது நாடு

வானமும் பூமியும் சூரியனும் அறிய
பூக்களால் அலங்கரிக்கப்பட்ட பெண்
வரலாற்றில் சிறப்பிடம் பெற்றாள் என்றெழுதி முடித்த களைப்பில்
எழுந்து தேநீர் அருந்தப் போனார் திரு. கண்ணியமூர்த்தி

பூக்களால் அலங்கரிக்கப்பட்ட பெண் எழுந்து
திரு. கண்ணியமூர்த்தியின் வரலாற்றுக் குறிப்பைப் படித்துப் பார்த்தாள்
அவள் இதயத்தைப் பிளந்திறங்கின
பெரும் பாறைகள்
அதிர்ந்தவள் கோபத்தில் நெருப்பானாள்
அந்த நெருப்புக் கனிந்து புன்னகையாகியபோது
அவள் வரலாற்றில் எழுதப்படலானாள்

தான் எழுதிய வரலாறு எப்படி மாறியது என்று தெரியாமல்
திகைத்தார் திரு. கண்ணியமூர்த்தி.

3
ஆறும் காடுகளும் வயலும் ஏரியும் மலையும் கடலும்
நஞ்சையும் புஞ்சையும் யாரோ வசமாகிட
தாகத்தில் தவிக்கிறார் நாட்டின் தலைவர்
எல்லாக் கிணற்றிலும் கோடை விளைந்து கிடக்க
வேறு வழியின்றிக் குழாய்க்கிணற்றை
தலைவரின் குரல் வளையில் இறக்கினர் சனங்கள் ●

கருணாகரன் <poompoom2007@gmail.com>

# அம்ருதா பதிப்பக வெளியீடுகள்




விலை ரூ.120/-




விலை ரூ.100/-




விலை ரூ.200/-




விலை ரூ.100/-




விலை ரூ.100/-




விலை ரூ.150/-




விலை ரூ.120/-

**அம்ருதா பதிப்பகம்**

அம்ருதா, 1 கோவிந்த ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 இரண்டாவது தெரு,
மூன்றாவது பிரதான சாலை,
சி.ஐ.டி நகர்-கிழக்கு, நந்தனம், சென்னை-600035.
அலைபேசி: 94440 70000

# தென்கிழக்கு ஆசிய நாடுகள்

## பர்மா

மு. ராஜேந்திரன்

### கொஞ்சம் துரோகமும் நிறைய ரத்தமும்

1947ஆம் ஆண்டு ஜூன் மாதம் பர்மிய தேசத்திற்கு 'விரைவில் விடுதலை தரப்போவதாக' இங்கிலாந்து பிரதமர் அட்லி அறிவித்தார். விடுதலை பெற்றவுடன் அமையவுள்ள அரசாங்கத்தின் ஆட்சியாளர்கள் யார் யார் என்று முடிவு செய்வதற்காக, அதே ஆண்டு ஜூன் மாதம் 19ஆம் தேதி ஜெனரல் ஆங் சூ தலைமையில் கூட்டம் கூடியது. விடுதலை பெறப்போகும் பர்மாவின் பிரதமராக ஆங் சூ மற்றும் அமைச்சரவையில் அமைச்சர்களாக பதவியேற்க இருந்த ஆறு பேருடனும் கூட்டம் நடந்து கொண்டிருக்கும்போது, கல்லோ ஊகோ என்பவரின் ஆதரவாளர்கள் கையில் துப்பாக்கியுடன் கூட்டம் நடந்த அரங்கத்திற்குள் நுழைந்தார்கள். ஆலோசனைக் கூட்டத்தில் கலந்து கொண்ட அனைவரையும் சுட்டுக் கொன்றனர். பர்மா, தலைவர்கள் இல்லாத தேசமாயிற்று.

பர்மாவின் விடுதலை ரத்தத்துடனும் அரசியல் சூழ்ச்சிகளுடனும்தான் மலர்ந்தது. நாட்டின் விடுதலைக்கான அறிவிப்பு அந்நாட்டின் தலைவர்களின் மரணத்தின் மீதான இரங்கலாகவும் மாறிப்போனது.

1942இல் பர்மிய தேசத்திற்கான அரசியல் சாசனத்தை உருவாக்கியவரும் பல்வேறு இனக்குழுக்களை ஒருங்கிணைத்தவருமான டாக்டர் பா மா (Dr.Ba Maw) விடுதலை அடையப் போகும் பர்மாவிற்கு ஒரு தாரக மந்திரத்தை அறிவித்தார். 'டதுவே, டதான், டமெய்ன்க்' (ஒரு ரத்தம் ஒரு குரல், ஓர் ஆணை)



ஜனவரி, 1948ஆம் ஆண்டு விடியற்காலை 04.20 மணிக்கு ஆங்கிலேய அரசாட்சியிலிருந்து பர்மா விடுதலை பெற்றது. ஜெனரல் ஆங் சூயி கொல்லப்பட்டதால் அவருக்கு வலதுகரமாக திகழ்ந்த பள்ளி ஆசிரியர் ஊ நூ சுதந்திர பர்மாவின் முதல் அடிபடி (அதிபதி) ஆனார்.

பர்மா சுதந்திரம் பெற்ற மறுநாள் இந்திய அரசியலமைப்புச் சட்டசபையின் தலைவர் டாக்டர் ராஜேந்திர பிரசாத் பர்மாவிற்கு வந்தார். தலைநகரில் நடந்த கூட்டத்தில், "சுதந்திர பர்மாவிற்கு அனைத்து உதவிகளையும் இந்தியா செய்யும்" என்று அறிவித்தார். பர்மாவின் வளர்ச்சிக்கு உதவ இந்தியா தயாராக இருந்தது. ஆனால், நடந்தது வேறு. சுதந்திரம் பெறுவதற்கான அறிவிப்பு வெளியிடப்பட்ட அன்றே பர்மாவின் அடிபடி (அதிபதி)யின் தாரக மந்திரம் - ஒரு ரத்தம் - தேசத்தையே ஒரே ரத்தக் களரியாக்கிவிட்டது. ஒரு குரல் என்ற எதிர்பார்ப்பில் இருந்த தேசத்தில் பல குரல்கள் நெறிக்கப்பட்டன. ஓர் ஆணை என்பதும் மாறி ராணுவத்தின் ஆணை மட்டுமே உரத்துக் கேட்கலாயிற்று.

அதிபதி, பதவி ஏற்ற சில மாதங்களிலேயே சீனப் பகுதியிலிருந்து வந்த கம்யூனிஸ்டுகளின் தாக்குதலை சமாளிக்க முடியாமல் இந்தியாவிற்குத் தப்பித்து வந்தார். இந்தியாவிலிருந்து சென்ற கூர்கா படை பர்மாவில் அமைதியை நிலைநாட்டியது. ஊ நூ ஆசிரியராக இருந்தவர். அந்த நினைப்பில் நீண்ட விடுப்பு எடுத்துக்கொண்டு ஆட்சியை ஜெனரல் நேவின்னிடம் ஒப்படைத்தார். இந்தியா வந்து புத்த கயா, சாஞ்சி, சாரநாத் என்று புனித தலங்களுக்கு விஜயம் செய்து பௌத்த மத விசாரணையில் முழுவதுமாக இறங்கிவிட்டார். ஜெனரல் நேவினின் தீவிர நடவடிக்கையால் பர்மாவில் அமைதி திரும்பியது. அமைதி திரும்பிய பிறகு நாடு திரும்பிய ஊ நூ, பின்பு நடந்த பொது தேர்தலிலும் வெற்றி பெற்றார். யாரை நம்பி நாட்டை ஒப்படைத்துச் சென்றாரோ அவரே துரோகமும் செய்தார். ஜனநாயக வழியில் தேர்தலில் வென்ற ஊ நூ வை, ஜெனரல் நேவின் கைது செய்து சிறையில் அடைத்தார். பர்மாவில் ராணுவ ஆட்சியை ஆரம்பித்து வைத்தார்.

ஜப்பான் இரண்டாம் உலகப் போரில், எதிரிகளை வீழ்த்துவதற்கானப் பல்வேறு வியூகங்களை வகுத்தது. 1942ஆம் ஆண்டு ஆங்கிலேய ஏகாதிபத்தியத்தின் கீழிருந்த பர்மாவை ஜப்பான் கைப்பற்றியது. தங்களின் படைகளைப் பராமரிக்க, நீர் வழியைக் கைவிட்டு, தாய்லாந்து வழியாக பர்மாவிற்கு 415 கி.மீ. நீளத்திற்கு ரயில் பாதை அமைக்கத் திட்டமிட்டது. உலகத் துயரங்களிலேயே ஆகப் பெரிய துயரமாக பர்மியர்களும் ஆசியர்களும் முகாம்களில் அடைக்கப்பட்டு, மிருகங்களைவிட கொடூரமாக நடத்தப்பட்டதில் ஒரு லட்சத்திற்கும் அதிகமானோர் கொல்லப்பட்டனர். பர்மா சந்தித்த மிகப் பெரிய துயரமது. இன்றும் நாகரீக உலகத்தின் கருப்புப் பக்கமாக இருப்பது, சயாம் மரண ரயில் பாதை.

தென்கிழக்கு ஆசியாவில் இரண்டாம் உலகப் போரின்போது அதிகம் பாதிக்கப்பட்டது பர்மிய மக்களே. ஒரு புறம் ஜப்பானியப் படையினர், மற்றொரு புறம் ஆங்கிலேயப் படை. மற்றொரு புறம்





சீனாவின் ஆதரவு பெற்ற உள்நாட்டு கம்யூனிஸ்டுகள். இன்னொரு புறம் பர்மாவின் சிறு சிறு இனக் குழுக்கள், மலைவாழ் மக்கள். பர்மிய வரலாற்றில் அதுவரை இல்லாத அளவு மனித உரிமை அத்துமீறல்கள் இரண்டாம் உலகப் போரின்போது ஆரம்பித்து இன்றுவரை தொடர்கிறது.

இரண்டாம் உலகப் போர்க்காலத்தில் பர்மிய தலைவர்களான டாக்டர் பா மா, ஜெனரல் ஆங் சூயி போன்றவர்கள் இந்தியத் தலைவர்களான நேதாஜி, நேரு, காந்திஜியுடன் நெருங்கிய தொடர்பில் இருந்தனர். நேதாஜி பர்மிய மண்ணிலிருந்து ஆங்கிலேயர்களை எதிர்த்துக் கொண்டிருந்த போது ஜெனரல் ஆங் சூயி ஆங்கிலேயர்களை எதிர்ப்பதற்காக ஜப்பானில் ராணுவப் பயிற்சி பெற்றார். 30 பர்மிய வீரர்களோடு பர்மா வந்து ஆங்கிலேயர்களுக்கு எதிராகப் போராடினார். ஆரம்பத்தில் ஜப்பானியர்களோடு நல்ல தொடர்பில் இருந்தார். பர்மாவின் நீர் வளத்தையும் நில வளத்தையும் பார்த்த ஜப்பானியர்கள் பர்மாவை விட்டுப் போக விரும்பவில்லை. பர்மியப் பெண்களுக்கு மிகவும் அச்சுறுத்தலாக இருந்த ஜப்பானிய வீரர்களை ஜெனரல் ஆங் சூயி வெளியேற்ற முயன்றார். நேதாஜி போன்ற வலுவான தலைவர் இருந்ததால் பர்மாவில் தமிழ்ப் பெண்களுக்கு எந்தத் தொந்தரவையும் ஜப்பானிய படைவீரர்கள் கொடுக்கவில்லை என்பதை பர்மியத் தலைவர்கள் இரண்டாம் உலகப் போரின்போது உணர்ந்தனர். பேயிடமிருந்து தப்பிப் பிசாசிடம் மாட்டிய கதையாகிவிட்டதே என்று யோசித்த ஜெனரல் ஆங் சூயி ஆங்கிலேயர்களின் உதவி பெற்று ஜப்பானியர்களை பர்மாவிலிருந்து விரட்டி அடித்தார்.

இரண்டாம் உலகப் போரில் அமெரிக்கா தலையிடாது என்று பர்மியத் தலைவர்கள் நம்பினர். 1775-1783 ஆண்டுகளில் அமெரிக்க சுதந்திரப் போர் நடந்தது. அமெரிக்காவும் அமெரிக்க விடுதலைக்கு உதவிய பிரான்சும் இங்கிலாந்திற்கு எதிரான நிலைப்பாட்டையே கொண்டிருந்தன. முதல் உலகப்போரில் கூட இங்கிலாந்து சார்ந்திருந்த அணியை கடைசி நேரத்தில் அமெரிக்கா ஆதரித்தாலும் ஆதரவு தாமரை இலைத் தண்ணீர் போலத்தான். கி.பி.1885 இல் மூன்றாம் ஆங்கிலப் பர்மியப் போர் உருவாவதற்குக் கூட ஒரு வகையில் ஆங்கிலேய - அமெரிக்கர்களுக்கு இடையே இருந்த பகைதான் காரணமாக இருந்தது. மூன்றாம் பர்மியப் போரைத் துவங்குவதற்கு, "பர்மிய அரசர் தி பா தர்பாரில் ஆங்கிலேயர்கள் அரசருக்கு மதிப்புக்

கொடுக்காமல் செருப்பை அணிந்து வந்ததுதான்" என்று இங்கிலாந்து வெளியுலகிற்குக் காரணம் சொன்னது.

உண்மையான காரணம் பர்மிய அரசர் தி பா தனது அமைச்சரை அமெரிக்காவிற்கு அனுப்பி பர்மாவில் பெட்ரோல் கம்பெனிகள் நிறுவ அழைத்ததும் பிரான்ஸ் நாட்டினரை பர்மாவில் வங்கிகள் அமைக்க அழைப்பு விடுத்ததும்தான்.

இரண்டாம் உலகப் போரில் எதிர்பாராதவிதமாக அமெரிக்காவின் ஹவாய் தீவிலிருந்த பெர்ள் துறைமுகத்தின்மீது டிசம்பர் 7, 1941இல் ஜப்பான் குண்டு வீசித்தாக்கியது. இதற்கு பதிலடியாக அமெரிக்கா போரில் குதித்தது. 1945 ஆகஸ்ட் 6ஆம் தேதி முதல் அணுகுண்டை வீசி, அமெரிக்கா ஜப்பானின் ஹிரோசிமா நகர் மீது தாக்குதல் நடத்தியது. 421 கி.மீ. தள்ளியிருந்த நாகசாகியில், இரண்டு நாட்கள் கழித்து ஆகஸ்ட் 8ஆம் தேதி இரண்டாம் அணுகுண்டை வீசியது. அணுகுண்டு தாக்குதலுக்குள்ளான ஜப்பான் ஆகஸ்ட் 15இல் சரணடைந்தது.

இரண்டாம் உலகப்போர் நடந்தபோது நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ், இந்திய விடுதலைக்காக ஜெர்மன் மற்றும் ஜப்பானின் உதவியை நாடியிருந்தார். பிரட்டிஷாரிடமிருந்து பர்மாவைக் கைப்பற்றியிருந்த ஜப்பான், நேதாஜிக்கு பர்மியப் பகுதியிலிருந்து இந்திய தேசிய ராணுவ நடவடிக்கைகளை முன்னெடுக்க ஒத்துழைப்புத் தந்தது. 1943ஆம் ஆண்டு நேதாஜி ரங்கூனில் சுதந்திர இந்தியாவின் தற்காலிக அரசை நிறுவினார். இந்தியாவின் விடுதலையும் நெருங்கிவிட்டது, இந்தியாவிற்கு வெளியில் இருந்து நேதாஜி இந்திய விடுதலை ஜோதியை கையில் ஏந்திவிட்டார் என்று ஏராளமானவர்கள் நேதாஜியை ஆதரித்தனர்.

பர்மாவிலிருந்த மதுரை ராமநாதபுரத்தை பூர்விகமாகக் கொண்ட மக்கள் பெருமளவில் நேதாஜிக்குப் பண உதவி செய்தனர். நேதாஜி 'ஆஸாத் பேங்க்' என்றொரு தேசிய வங்கியை ஆரம்பித்தார். நன்கொடையாளர்கள் பெரும் விருப்பத்துடன் உதவி செய்ய முன்வந்தார்கள். நேதாஜியை தராசின் ஒரு தட்டில் உட்கார வைத்து மறுதட்டில் தங்க நகைகளை வைத்தனர். தங்கம் இருந்த பக்கம் எடை அதிகமாக இருக்கும்வரை கழுத்து, காதுகளில் இருந்த நகைகளைக்கூட பெண்கள் கழட்டிப் போட்டுக்கொண்டே இருந்தனர். சில பெண்கள் தாலிகளைக்கூட கழட்டிக்கொடுத்தார்கள். மேஸ்திரி நாகலிங்கத் தேவர் என்பவர் கையிலிருந்த பொன், பொருளைக் கொடுத்துவிட்டு தனது வீட்டையும் நேதாஜியிடம் ஒப்படைத்தாராம். அந்த வீட்டை ஜமால் பிரதர்ஸ் ஏலத்தில் எடுத்து ஏலத் தொகையை நேதாஜியிடம் கொடுத்தனர்.

நேதாஜியின் திட்டங்கள் எல்லாம் அமெரிக்காவின் தலையீடால் மாறிப்போனது. ஜப்பான் சரணடைந்தவுடன் நேதாஜி ருஷ்யாவின் உதவியை நாடி, தப்பிச் சென்றார். நேதாஜி ஆகஸ்ட் 18இல் தைவான் தீவிலிருக்கும் தைபே விமான நிலையத்தில் நடந்த விமான விபத்தில் மறைந்தார்.

பிறகு, இந்திய வம்சாவழியினருக்கு நெருக்கடிகள் ஆரம்பமாயின. அதுவரை தமிழர்களை 'பேரன்', 'பேத்திகள்' என்று உறவு முறையில் அழைத்துப் பழகியிருந்த பர்மியர்கள் இந்திய வம்சா வழியினர் வெளியேற வேண்டும் என்று போர்க்கொடி பிடித்தனர். பர்மிய அரசின் அடக்குமுறைகள் ஆரம்பமாயின. "கப்பலை விடுங்கள், கண்ணீரைத் துடையுங்கள்" என்ற பதாகையுடன் இந்திய வம்சா வழியினர் இந்திய தூதரகத்தை முற்றுகையிட்டனர். பர்மாவைவிட்டு வெளியேறுபவர்கள் ஒரு டிக்கல் (2 பவுன்) மட்டும் எடுத்துச் செல்ல அனுமதிக்கப்பட்டனர்.

இந்திய வம்சாவழியினர் நடத்திய கடைகள், தொழிற்சாலைகளை பர்மா அரசு தேசியமயமாக்கியது. நேற்று வரை கடையின் உரிமையாளர், இன்று அந்தக் கடையில் வேலையாள். அதே கடையில் சம்பளத்திற்கு வேலை பார்த்த பர்மியர் இன்று முதலாளி. மாதச் சம்பளத்திற்கு வேலை பார்த்து ஒரே நாளில் கடைக்கு முதலாளி ஆகிவிட்ட வேலையாளால் கடையைக்கூட சரியாக நடத்த முடியவில்லை. பண நோட்டுக்கள் செல்லாது என்று திடீர் அறிவிப்பு. FRC (Foreign Registration Certificate) இருந்தால் ஒரு மாதம் மட்டுமே இந்தியர்கள் பர்மாவில் தங்கிக்கொள்ளலாம். அதற்காக வருடந்தோறும் 50 ரூபாய் பணம் கட்டவேண்டும்.

தமிழ் முஸ்லீம்கள் (சோழிய முஸ்லீம்), குஜராத் முஸ்லீம் (சூரத் முஸ்லீம்), மார்வாடி முஸ்லீம் (மேமம் முஸ்லீம்), பஞ்சாப் முஸ்லீம் (பட்டா), பெங்கால் முஸ்லீம் (ரோகிங்கா) என்று முஸ்லீம் மக்கள் வகை பிரிக்கப்பட்டனர். பர்மாவில் எந்த ஆவணமும் இன்றி தங்கியவர்கள் Emergency Certificate (EC) வாங்கிக்கொண்டு தமிழகம் வந்து சேர்ந்தனர். பர்மாவிலிருந்து

'முசாபரி', 'இஸ்லாமியா', 'முகம்மதியர்' என்று மூன்று கப்பல்கள் இந்தியாவிற்கு அகதிகளை கொண்டுவந்து இறக்கின. அந்தக் காலக்கட்டத்தில் எண்பது ரூபாய் பயணக் கட்டணமாக இருந்தது. அந்தத் தொகை அகதிகளிடம் வசூலிக்கப்படவில்லை.

முதன்முதலில் தமிழகத்தில் அகதிகள் என்று அடையாளத்துடன் திரும்பிய தமிழர்கள் பர்மியர்கள் தான். பர்மா அகதிகள் திருவள்ளூர் மாவட்டம் ரெட்ஹில்ஸ் பகுதியிலும் தஞ்சாவூர், திருச்சி, மதுரையிலும் தங்க வைக்கப்பட்டனர். வீடு கட்ட கடன், தொழில் செய்ய கடன் வசதி என்று அரசு உதவ முன் வந்தது.

1962ஆம் ஆண்டு மார்ச் மாதம் 2ஆம் தேதி பர்மாவில் ஏற்பட்ட ராணுவ ஆட்சி கடந்த 55 வருடங்களாகத் தொடர்ந்து கொண்டிருக்கிறது. அமைதி வாழ்க்கை வாழும் பௌத்த பிட்சுக்களும் பர்மிய மாணவர்களும் போராடிப் பார்த்து ஓய்ந்து விட்டனர். 1919ஆம் ஆண்டு பர்மா பற்றி சரித்திர ஆராய்ச்சியாளரும் ஐ.சி.எஸ். அதிகாரியுமான வின்செண்ட் ஏ.ஸ்மித், "பர்மாக்காரர்கள் வறட்டுப் பிடிவாதம் உடையவர்கள். வெளிநாட்டினரோடு அதிகம் தொடர்புகொள்ள விரும்பாதவர்கள். அறியாமை நிறைந்தவர்கள். மற்ற நாடுகளில் ஏற்பட்ட முன்னேற்றங்களை அறிய விரும்பாதவர்கள். சிறு நிலப் பகுதிக்குள் பலகாலம் தொடர்ந்து தோல்வி ஏதும்



சந்திக்காமல் வெற்றிகரமான வாழ்வு வாழ்வதால் அவர்களுக்குத் தற்பெருமை நோய் பீடித்திருக்கிறது" என்று குறிப்பிட்டுள்ளது கவனிக்கத்தக்கது.

## தமிழர்களும் பர்மியர்களும்

இந்தியாவிற்கும் பர்மாவிற்குமான வரலாற்றுப் பூர்வமானத் தொடர்பு பௌத்த மதத்தின் மூலமும் கடல் வாணிபத்தின் மூலமும் ஆயிரத்து ஐநூறு ஆண்டுகளுக்கு மேல் இருந்தாலும் சோழர்கள் காலத்திலிருந்துதான் எழுதப்பட்ட வரலாறு இருக்கிறது. பத்தாம் நூற்றாண்டு வரை பர்மாவிற்கு வாய்மொழி வரலாறுகளே உள்ளன. பர்மாவின் அரசியல், சமூக வரலாறு பற்றிய முழுமையானச் செய்திகள் கிடைக்கவில்லை.

இன்றைய பர்மாவின் மக்கள் தொகையும் தமிழ்நாட்டின் மக்கள் தொகையும் 6 கோடிதான். ஆனால், பர்மா, தமிழ்நாட்டை விட நிலப்பரப்பில் 5 மடங்கு பெரியது. தமிழ்நாட்டின் வருடாந்திர மழையளவு 700 மி.மீ. தான். பர்மாவின் வருடாந்திர மழையளவு 2700 மி.மீ. இந்தியா, சீனா, வங்காளதேசம் லாவோஸ், தாய்லாந்து நாடுகள் பர்மாவைச் சுற்றி உள்ளன.

பர்மாவை தமிழர்கள் 'ஸ்வர்ண பூமி' என்றழைத்தனர். பர்மிய ஆற்று மணல்களில் தங்கம் கிடைப்பதால் இப்படிப் பெயர் வந்திருக்கலாம். ராஜேந்திர சோழனின் ஆட்சிக் காலத்தில் தென் கிழக்கு ஆசியாவின் பல பகுதிகள் வெல்லப்பட்டன. பர்மா துவங்கி மலேசியா, தாய்லாந்து, ஜாவா, சுமத்திரா, வியட்நாம், கம்போடியா வரை பல தேசங்கள் வெல்லப்பட்டன. ராஜேந்திர சோழனின் மெய்கீர்த்தியில் சொல்லப்பட்ட 'பப்பாளம்' நகரம் பர்மாவில் உள்ள பாகாங்கு நகராக இருக்கலாம். இவ்வூரில் உள்ள பதின்மூன்றாம் நூற்றாண்டுத் தமிழ்க் கல்வெட்டில் தமிழகத்து வணிகர்கள் புக்கம் என்ற அரிமர்த்தனபுரத்தில் பெருமாள் கோயில் கட்டிய செய்தி சொல்லப்பட்டிருக்கிறது.

ஸ்வஸ்தி ஸ்ரீ புக்கம் ஆன அரிவர்த்தனப்

புரத்து நானாதேவி விண்ணகர்

ஆழ்வார் கோயில் திருமண்டபமும்

திருக்கதவும் இட்டேன்

மலை மண்டலம்

தூய மகோதயர் பட்டினத்து

ஈராயிரான சிறியனான சீ குலசேகர

நம்பியேன்

கிபி1880களில் மதுரை, ராமநாதபுரம் பகுதியிலிருந்த நாட்டுக்கோட்டை செட்டியார்களுக்கு பர்மாவின் சீர் செய்யப்படாத விளைநிலங்கள் பற்றிய செய்திகள் கிடைத்திருக்கின்றன. தரிசாகக் கிடக்கும் நிலங்களைப்

பண்படுத்தினால் அந்த நிலங்களை சீர்திருத்துபவரே உரிமையாக்கிக் கொள்ளலாம் என்று ஆங்கிலேய அரசு அறிவித்தது.

மெட்ராஸின் தம்புச் செட்டித் தெருவில் கையில் 16 ரூபாயோடு சுற்றித் திரிந்தால் போதும். ஆங்கிலேயே கங்காணிகள் 16 ரூபாயை வாங்கிக்கொண்டு 'ஜலகோபால்' என்ற கப்பலில் ஏற்றிவிடுவார்கள். வெள்ளிக்கிழமைகளில் கப்பல் கிளம்பும். நான்கு நாட்கள் கடல் பயணத்தில் பர்மாவின் அப்போதைய தலைநகரான ரங்கூனுக்கு வந்துவிடலாம். இடுப்பில் வேட்டி, தோளில் மேல் துண்டு, கக்கத்தில் ஒரு கோரைப்பாய், கையில் வெற்றிலைப் பெட்டியோடு பர்மா வந்த செட்டியார்கள், பர்மாவின் நிலங்கள் தஞ்சாவூர் விளைநிலங்கள்போல இருப்பதைக் கண்டார்கள். மதுரை ராமநாதபுரம் பகுதிகளில் கூலி வேலை செய்தவர்களை பர்மாவிற்கு அழைத்து வந்து நிலங்களைச் சமன்படுத்தி விவசாயத்தை ஆரம்பித்தனர். பர்மிய மக்களுக்கு வட்டிக்குப் பணம் கொடுத்து பொருள் ஈட்டினர். ஈட்டிய செல்வத்தை பர்மாவிலேயே முதலீடு ஆக்கினர். 1930களில் பர்மாவின் முப்பது சதவிகித விளைநிலங்கள் நாட்டுக் கோட்டை செட்டியார்களிடம் இருந்தன.

1930களில் நாட்டுக்கோட்டை செட்டியார்கள் மீதான மனக்கசப்பு வெளியில் தெரிய ஆரம்பித்தது. ஏ.வி.மெய்யப்ப செட்டியார், அண்ணாமலை செட்டியார் போன்றவர்களிடம் இரண்டு லட்சம் மூன்று லட்சம் ஏக்கர்கள் என்று நிலங்கள் இருந்தன. பர்மாவிலிருந்த ஆங்கிலேய வங்கிகள் ஒரு வட்டிக்கு கடன் கொடுத்தபோது செட்டியார்கள் அதைவிட அதிக வட்டி வசூலித்ததாகப் பரவலாகப் பேசப்பட்டது. வட்டி தர முடியாத பர்மியர்களிடமிருந்து அவர்கள் ஒத்தி வைத்த நிலங்கள் வலுக்கட்டாயமாகப் பறிமுதல் செய்யப்பட்டதாக பர்மியர்கள் புகார் தெரிவித்தனர். தமிழர்கள் நடத்துகிறார்கள் என்ற ஒரே காரணத்திற்காக பர்மாவில் பிரபலமாக விளங்கிய இந்தியன் ஓவர்சீஸ் வங்கி வாடிக்கையாளர்களை இழக்க ஆரம்பித்தது.

பர்மாவில் திருமணம் தாண்டிய உறவு பெரும் பாலும் இருக்காது. வியாபாரம் காரணமாக பர்மாவில் தங்கிய வெளிநாட்டினரின் பெண் தொடர்புகள் பற்றி புகார்கள் ஏதும் பெரிதாக வராதது இரு நாட்டினரின் மாண்பைப் பறை சாற்றியது. இருப்பினும் பர்மியர் அல்லாதோர் மீது பொருளாதாரக் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன. நிலச் சீர்திருத்தச் சட்டம் கொண்டுவரப்பட்டது. 100 ஏக்கருக்கு மேல் யாரும் வைத்துக்கொள்ளக்கூடாது என்ற கட்டுப்பாடு விதிக்கப்பட்டது.

இந்திய வம்சாவளியினர் பர்மாவில் இருந்தவரை காடுகள் திருத்தி விளைநிலங்களாயின. தேசத்தில் அமைதி இருந்தது. வளர்ச்சியிருந்தது. மக்கள் மகிழ்ச்சியாக இருந்தனர். இன்று வளர்ச்சியும் இல்லை, அமைதியும் இல்லை. ராணுவக் கெடுபிடியும் வறுமையும் மட்டும் மிச்சமிருக்கிறது.

## பர்மாவின் இயற்கை

மேல் பர்மா அடர்ந்த காடுகளைக் கொண்டது. இயற்கையிலேயே வளர்ந்த தேக்கு மரங்களும் தங்கம் மரகதக் கற்கள் கொண்ட சுரங்கங்களும் மேல் பர்மாவில் உள்ளன. கீழ் பர்மா வளமான சமவெளி. கேரளாவைப் போன்ற நீர் வளமும் தஞ்சாவூரைப் போன்ற நில வளமும் உள்ள தேசம். நான்கு மாதங்கள் தொடர்ந்து அடைமழை பெய்யும். ஜூனிலிருந்து செப்டம்பர் மாதம் வரை வீட்டைவிட்டு வெளியே வர முடியாத அளவு மழை பெய்யும்.

பர்மிய நதிகளில் வருடம் முழுவதும் தண்ணீர்ப் பிரவாகம்தான். மொத்தமுள்ள 64 நதிகளில் ஐராவதி நதி மிகப் பெரியது. 2200கிமீ தூரம் ஓடி பர்மிய வயல்வெளிகளை பசுமைக் காடாக்குகிறது. தேசத்தில் 57 சதவிகிதம் காடுகள் உள்ளன. எங்கு மண்ணைத் தோண்டினாலும் பத்து அடியில் குடி தண்ணீர் கிடைக்கும். அரிசி உற்பத்தியில் உலகின் முதல் ஏழு நாடுகளில் பர்மாவும் ஒன்று. இயற்கையாக தேக்கு மரக்காடுகளை உடைய உலகின் மூன்று நாடுகளில் பர்மாவும் ஒன்று. பர்மாவின் காசின் (Kachin) மாகாணத்திலுள்ள லோன்கின் நகரில் பாயும் உயூ (Uyu) என்ற நதியின் கரைகளில் பச்சை மரகதக் கற்களும் 'புறாவின் ரத்தத் துளி' போன்ற சிவப்பு நிறக் கற்களும் கிடைக்கின்றன. உலகின் 57 சதவிகித மரகதக் கற்கள் பர்மாவில் உற்பத்தியாகின்றன.

வரலாற்றுக் காலத்திலிருந்து பர்மா எந்தக் காலத்திலும் அந்நியர்களின் ஆட்சியில் நீண்ட காலம் இருந்ததில்லை. மிகப் பெரிய நில வளமும் நீர் வளமும் கொண்டு, ஆண்டுதோறும் இயற்கைப் பேரிடர் எதையும் சந்திக்காத நிலவியல் அமைப்பைக் கொண்டது பர்மா. இதனால், ஆரம்பம் தொட்டே அண்டை நாடுகளான சீனாவும் மங்கோலியாவும் அஸ்ஸாம் பகுதியிலிருந்த அரசர்களும் பர்மாவின் மீது போர் தொடுத்திருக்கின்றனர்.

## பர்மாவின் வரலாற்றில் போர்கள்

பர்மிய தேசம் பெரும் போர்களைச் சந்தித்த தில்லை. கடந்த ஆயிரம் ஆண்டுகளில் அவர்கள் சந்தித்தது மூன்று போர்கள் மட்டுமே. ராஜேந்திர சோழன் காலத்தில் கி.பி. 1025இல் கடாரப் படையெடுப்பு நடந்தது. பர்மிய அரசனிடம் மகரத்தோரணம் பொன், பொருளைக் கப்பமாகப் பெற்றுக்கொண்டு சோழர் படை தமிழகம் திரும்பியது முதல் நிகழ்வு. அடுத்து மங்கோலிய அரசன் செங்கிஸ்கானின் பேரன் குப்ளாய்கானின் (1260-1294) படையெடுப்பு. இவன் 1273, 1283, 1287 ஆண்டுகளில் பர்மாவிற்குப் படையெடுத்து வந்தாலும் இவனுக்கு மூன்று முறையும் தோல்வியே. அடுத்த அறுநூறு ஆண்டுகளுக்கு எந்த அந்நியப் படையெடுப்பையும் பர்மா சந்திக்கவில்லை.

கிபி 1824 முதல் 1826 வரை நடைபெற்ற முதல் ஆங்கிலேய - பர்மியப் போரில் இந்தியாவிலிருந்த ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் கம்பெனி பர்மாவின் பல பகுதிகளைப் பிடித்துக்கொண்டது. கல்கத்தாவிலிருந்த ஆங்கிலேய கவர்னர் ஜெனரல் லார்ட் அர்ம்ஹெர்ஸ்ட் பெரும் பணச் செலவில் (13 மில்லியன் பவுண்ட்) இந்தப் படையெடுப்பை நிகழ்த்தினார். போரில் தோற்ற பர்மா போர்ச் செலவிற்காக 1 மில்லியன் பவுண்ட் கட்டியது.



கிபி 1852இல் கவர்னர் ஜெனரல் டல்ஹவுசி காலத்தில் நடந்த இரண்டாம் ஆங்கிலேயப் பர்மியப் போரின் முடிவில் பர்மிய அரசன் மாற்றப்பட்டான். இந்தப் போருக்குப்பின் பர்மாவின் வெளிநாட்டுக் கொள்கைகளை ஆங்கிலேயர்களே முடிவு செய்ய ஆரம்பித்தார்கள் கி.பி. 1857இல் டெல்லியில் நடந்த சிப்பாய்க் கலகத்தை அடக்கிய பின் இந்தியாவின் கடைசி மொகலாய அரசரான பகதூர் ஷா பர்மா விற்குக் கொண்டு வரப்பட்டு மாண்ட்லே சிறையில் அடைக்கப்பட்டார்.

கிபி1885இல் நடந்த மூன்றாம் ஆங்கிலேய பர்மியப் போரின் முடிவில் பர்மிய அரசன் திப்பா (Thibaw) கைது செய்யப்பட்டு மனைவி நான்கு பிள்ளைகளோடு வேலூர் மாவட்டம் ராணிப் பேட்டைக்கு கொண்டு வரப்பட்டார். இப்போது வருவாய்க் கோட்ட ஆட்சியர் அலுவலகம் உள்ள பழமையான கட்டடத்தில்தான் அவர் சில மாதங்கள் சிறைக் கைதியாக இருந்தார். ராணிப்பேட்டையின் வெயிலைத் தாங்க முடியாததால் அவரை மகாராஷ்டிர மாநிலத்திலுள்ள ரத்னகிரிக்கு மாற்றினர். மூன்றாம் பர்மியப் போருக்குப் பின் பர்மா, இந்தியாவின் ஒரு பகுதியாக மாறிப்போனது. 1937 வரை இந்தியாவின் வைஸ்ராயின் கட்டுப்பாட்டிலிருந்த ஒரு மாகாணமாக பர்மா இருந்தது. இந்தக் காலக்கட்டத்தில் பர்மாவில் சுதந்திரப் போராட்ட வீரர்கள் சிறைவைக்கப்பட்டனர். 1908 முதல் 1914 வரை ஆறு ஆண்டுகள் பால கங்காதர திலகர் மாண்ட்லே சிறையில் இருந்தார். 1925ஆம் ஆண்டு நேதாஜி மாண்ட்லே சிறையில் அடைக்கப்பட்டார்.

### பர்மிய மக்கள்

பர்மிய இனக்குழுக்களில் ஊர்த்தலைவர்களுக்கு முக்கியத்துவம் அதிகம். ஊர்த்தலைவராகப் பெண்களும் இருக்கலாம். பர்மிய வாழ்வில் விழாக்களுக்குப் பஞ்சமில்லை. குழந்தை பிறந்த ஒரு மாதத்தில் பெயர் வைக்கும் விழா நடக்கும். அன்று குழந்தையின் தலை மயிரைக் கத்தரித்து, குழந்தையைக் குளிப்பாட்டுவார்கள். வெள்ளிக் கிண்ணத்தில் நறுமணம் கலந்த நீர் வைக்கப்படும். அதில் விருந்தினர்கள் வெள்ளி நாணயத்தைப் போடுவார்கள். நறுமண நீரை குழந்தையின் தலையில் தெளிப்பார்கள். பெண் குழந்தைகளுக்கு என்று பெரிய விழாக்கள் ஏதும் கிடையாது. காது துளையிட்டு தங்கத் தோடுகள் போடும் விழா மட்டுமே பெண் குழந்தைகளுக்காக நடத்தப்படுகிறது. திருமண வயதை அடைந்த பெண் விரும்பினால் மட்டுமே திருமணம். திருமணத்தில் பெண்ணின் விருப்பம் மிக முக்கியம். ஒரு பெண்ணோ ஆணோ எந்த நேரமும் மணமுறிவு பெறலாம். ஆணும் பெண்ணும் தொழில் நிமித்தமாகப் பிரிய நேர்ந்தால், பிரிவுக் காலம் ஒரு ஆண்டுக்கு மேல் என்றால் பெண் விவாகரத்துக் கோரலாம். மூன்று ஆண்டுகளுக்கு மேல் பிரிவு என்றால் ஆண் விவாகரத்துக் கோரலாம். இந்த வகையில் ஆணை விட பெண் இரண்டு ஆண்டிற்கு முன்பே முடிவு எடுக்கும் அதிகாரம் பெற்று விடுகிறாள்.

திருமணங்களில் புத்த பிட்சுக்கள் கலந்து கொள்ளமாட்டார்கள். அதனால் வெற்றிகரமான திருமண வாழ்க்கை நடத்தும் ஒரு முதிய ஜோடி திருமணத்தை முன்னின்று நடத்தும். பர்மாவில் திருமணத்தின்போது ஆண்தான் பெண்ணுக்குப் பணம் கொடுத்து திருமணம் செய்யவேண்டும். பெண்கள் வியாபாரம் செய்வார்கள். விவசாய வேலை செய்வார்கள். தெருவில் கணவன் மனைவி இருவரும் நடந்து செல்ல நேர்ந்தால் பெண் ஆணுக்குப்



பின்னால்தான் நடந்து செல்வாள். பர்மாவில் உயில் எழுதும் முறை கிடையாது. பெற்றோர்களின் இறப்பிற்குப்பின் சொத்துக்கள் குழந்தைகளுக்குள் சரிசமமாகப் பிரிக்கப்படும்.

அன்னாசி நாரிலும் வாழை நாரிலும் நெய்த பட்டுக் கைலி அணிந்து சரசரவென்று சிறு ஒலி எழுப்ப நடந்து வரும் பர்மியப் பெண்களின் சுபாவம் எந்த ஆணையும் கவரக்கூடியது. ஆரிய இனத்தின் திருத்தமான முகம், கட்டான உடலமைப்பு, மங்கோலிய இனத்தின் மஞ்சள் நிறம் என்று பர்மியப் பெண்கள் கவர்ச்சியாக இருப்பார்கள். எதைக் கொடுத்தாலும் நிலத்தில் மண்டி போட்டு மரியாதையோடு வாங்குவார்கள். இந்தியாவிலிருந்து 10ஆம் நூற்றாண்டில் சோழர்கள் படை பர்மாவைக் கடந்தபோது சில படைவீரர்கள் பர்மியப் பெண்களின் பணிவு, அழகைக் கண்டு தங்கிவிட்டனர்.

பர்மியரின் உணவு வெகு எளிமையானது. கருஞ்சிவப்பு நிறத்திலுள்ள கவுனி அரிசியை வேக வைத்து, அதோடு மரியங்காய் ஊறுகாய், மீன் ஊறுகாய் (நுப்பி) தொட்டுக்கொண்டு சாப்பிடுவார்கள். வசதியானவர்கள் வீட்டில் காய வைத்த இறால் மீன்கள் (பசூஞ்சா) இருக்கும். சாப்பிட்டு முடிந்ததும் ‘லப்பை’ உண்டு. லப்பை என்றால் தேயிலைக் கொழுந்தை கொதிநீரில் அவித்து அதோடு வெள்ளை எள்ளையும் வறுத்த நிலக்கடலையையும் போட்டிருப்பார்கள். மீன் அதிக அளவில் உணவில் சேர்ப்பதால் பர்மியர்கள் மிகுந்த ஆரோக்கியத்துடன் இருப்பார்கள். பர்மிய ஆண்கள் கொஞ்சம் சோம்பேறித்தனத்துடன் இருப்பார்கள். ஆசைகள் அதிகமின்றி வாழ பௌத்த மதம் கற்றுக் கொடுத்திருக்கிறது. எதிலும் நிறைவைக் காணும் மன நிலையை மக்கள் பெற்றிருக்கிறார்கள். தான தர்மங்கள் செய்வது, புத்த பிட்சுகளின் ஆலோசனைகளைக் கேட்பது, நாட்டியம் ஆடுவது, பல்வேறு விழாக்களில் கலந்துகொள்வது போன்றவற்றில் மட்டுமே ஆர்வம். அனைத்து விழாக்களிலும் ராமாயணக் கதைகளும் புத்தபிரானின் வாழ்க்கையும் நாடகங்களாக நடித்துக் காட்டப்படும். பர்மாவின் பெரும்பான்மை மக்களின் மதம் புத்த மதம். பௌத்தத்தை ஏற்றதால் பர்மியர்களிடம் மத சகிப்புத்தன்மை அதிகம்.

## பர்மியர்களின் மதம்

கிபி1084இல் ஆட்சி செய்த பர்மிய அரசர் அனவரதா புத்த மதத்தை பர்மாவின் தேசிய மதமாக அறிவித்தார். மதத்தின் பெயரால் பர்மாவை ஒன்று படுத்தினார். புத்தரின் போதனைகள் அடங்கிய திரி பீடகத்தை இலங்கையிலிருந்தே பர்மா பெற்றது.

அனவரதாவின் காலத்தில் தென்னிந்தியாவில் மிகவும் வலிமையோடு இருந்த குலோத்துங்க சோழனுடன் அனவரதன் தொடர்பில் இருந்திருக் கிறான். ஆதிகாலம் தொட்டே பர்மாவிற்கும் தமிழகத்திற்கும் இலங்கைக்கும் மத ரீதியான தொடர்பு இருந்திருக்கிறது. இவரது காலத்தில் சோழ அரசர்கள் மூலம் ஜோதிடம் பர்மாவில் பரவியது. ‘நாட்’ என்று சொல்லப்படும் கிராம தேவதைகளை வணங்கும் முறை ஒவ்வொரு கிராமத்திலும் துவங்கியது. ஒவ்வொரு ஊருக்கும் ஒரு கிராம தேவதை, அந்தக் கிராம தேவதைகளை சாந்தப்படுத்த விழாக்கள். விழாக்களில் மிருக பலி தரப்பட்டது. கிராம தேவதைகள் ஊரைவிட்டு வெளியே இருந்த மலை உச்சிகளிலும் கிராமத்து ஏரியிலும் வாழ்வதாக நம்பப்பட்டது. மன்னர் அனவரதா பர்மாவின் ஒற்றுமையை நிலைநாட்ட ஒவ்வொரு கிராமத்திலும் இருந்த 36 கிராம தேவதைகளோடு, தேசத்திற்காக ஒரு கிராம தேவதையையும் சேர்த்து 37 கிராம



தேவதைகளாக அறிவித்தார். ஒவ்வொரு ஆண்டும் டிசம்பர் மாதத்து பௌர்ணமி நாளில் இந்தக் கிராம தேவதைகளுக்குப் பொது விருந்து நடக்கும்.

பௌத்த மதம், ஜாதகம் இவற்றோடு மட்டமான உலோகங்களை தங்கமாக மாற்றும் ரசவாதம் இந்தக் காலக்கட்டத்தில்தான் பர்மாவில் பெரிய கலையாக வளர்ந்தது. ஒரு பர்மிய இளைஞன் மூன்று நிலைகளைக் கடக்க வேண்டும். முதல் நிலை இளமைப் பருவம். சிறுவனாக இருக்கும்போதே பௌத்த மடத்திற்குச் சென்று மொட்டை அடித்துக் கொண்டு ஒரு வாரம் தங்கவேண்டும். பிச்சை எடுத்து உண்பது, பெரியவர்கள் சொல்வதை பணிவுடன் கேட்டு சமயக் கல்வியைப் பெறுவது, இளமைப் பருவத்து வேலைகள். அடுத்த கட்டம் திருமணம். உலக வாழ்க்கையில் பெரும் பற்றற்று சராசரி வாழ்க்கை நடத்தும் அளவு பொருளீட்ட வேண்டும். மூன்றாவது கட்டம் முதுமைப் பருவம். பார்க்குமிடமெல்லாம் புத்த பிக்குகளுக்கு மரியாதை செய்து கொண்டு கோயில்களில் அமர்ந்திருத்தல். உத்ராட்ச மாலைகளை உருட்டுதல்.

### இறுதியாக

பர்மா என்று நம் நினைவுகளில் தங்கிவிட்ட இன்றைய மியான்மர், தென் கிழக்கு ஆசிய நாடுகளில் 'இரும்புத் திரை' நாடாக அறியப்படுகிறது. அரசியல் ஏற்றத்தாழ்வுகள் பர்மாவின் முகத்தை மாற்றிக் கொண்டே இருக்கின்றன. ராணுவ ஆட்சியென்றாலும் ஜனநாயக ஆட்சியென்றாலும் நடைமுறைகளில் பெரும் வித்தியாசம் இல்லை.

பர்மாவின் விடுதலை அறிவிக்கப்பட இருந்த நேரத்தில் சுட்டுக்கொல்லப்பட்ட ஜெனரல் ஆங் சூயின் மகள் ஆங் சாங் சூகிதான் இப்பொழுது பர்மாவின் நடைமுறைத் தலைவராக இருக்கிறார். (இதென்ன புதுப் பதவி என்று தெரியவில்லை.) 1962 முதல் தொடரும் ராணுவ ஆட்சியை அகற்றி ஜனநாயக வழியில் நாட்டைக் கொண்டு செல்ல முயற்சித்த அவர் 15 ஆண்டுகள் வீட்டுக் காவலில் வைக்கப்பட்டார். அவருடைய அரசியல் வாழ்க்கையில் நான்கில் மூன்று பகுதி வீட்டுக் காவல்தான். உலகம் முழுக்க உள்ள அரசியல் தலைவர்களின் கவனத்தையும் நல்லெண்ணத்தையும் பெற்ற ஆங் சாங் சூகி, பர்மாவில் ஏற்பட்ட அரசியல் மாற்றங்களுக்குப் பிறகு, வீட்டுச் சிறையிலிருந்து விடுவிக்கப்பட்டார். பர்மாவின் நடைமுறைத் தலைவராகவும் ஆனார்.

சிறையில் இருந்த காலங்களில் அவரின் அறவழியிலானப் போராட்டங்களுக்காக அமைதிக்கான நோபல் பரிசு உள்ளிட்ட உலகின் பல்வேறு உயரிய விருதுகளைப் பெற்றார். அவரால் நேரில் வந்து பெற முடியாத சூழலில் விருதுகள் அவரைத் தேடி வந்தன.

பெரும் அதிர்ச்சியான திருப்பமாக, விருது கொடுத்த ஏழுக்கும் மேற்பட்ட அமைப்புகள் கொடுத்த விருதினைத் திரும்பப் பெறுவதாக அறிவித்துள்ளன. விருதாளர்கள் விருதினைத் திருப்பிக்கொடுக்கும் செய்திகளைத்தான் அறிந்திருக்கிறோம். ஆங் சாங் சூகிக்கோ நேர்மாறு. ஜனநாயக அரசியலுக்காகப் பாடுபட்ட ஓர் அரசியல் தலைவர் ஜனநாயகத்திற்கு எதிரானவராக குற்றஞ்சாட்டப்படுவது புதிர் நிரம்பியது.

பர்மா ஓர் இரும்புத் திரை நாடென்பதை இப்பொழுதும் உணர்த்தியபடி இருக்கிறது. முதல் வரியில் சொன்னதுபோல், பர்மாவில் எப்பொழுதுமே கொஞ்சம் துரோகமும் நிறைய ரத்தமும்தான். ●

டாக்டர் மு.ராஜேந்திரன், இ.ஆ.ப <dr.mrajendran@gmail.com>

# சாவின் நிழல் அறிந்தவள்

ராம் முரளி

வியர்வை குமைந்தெழுந்து உடல் முழுக்க பிசுபிசுப்பை உண்டாக்கியிருந்த அந்த பின் மதியப்பொழுதில், கறிக் கடைகளில் தோலுரித்து தொங்க விடப்பட்டிருக்கும் விலங்குகளின் சதைப் பிண்டங்களைப் போல வாகனங்களின் உதிரி பாகங்கள் இருபுறமும் தொங்கியபடியிருந்த புதுப்பேட்டை மையச் சாலையை கடந்து பைக்கில் பயணிக்கையில், விநோதமான முறையில் பாலாவின் காதின் அருகில் குனிந்து அமுதா கிசுகிசுத்தாள், "அந்த பாலத்தின் மறுகரையில் பிணம் ஒன்று கிடக்கிறது."

பாலாவுக்கு ஒருகணம் திடுக்கிடல் உண்டானது. அவளது பேச்சின் சாரம்சம் புரிபடாமல் பைக்கை முன் செலுத்தியபடியே தலையை திருப்பி அவளைப் பார்வையிட்டான். அமுதா வெறித்த பார்வையுடன் தொலைவில் தெரிந்துகொண்டிருந்த பாலம் ஒன்றினை நோக்கி விரல் நீட்டி மீண்டும் "அதோ அந்த பாலம்தான்" என்றாள். மிளிரும் ஒளி வண்ண வெளிச்சத்தின் அடியில் வெள்ளை கோடுகளைப்போல அவை தொலைவில் தென்பட்டன. அவளது குரலில் அன்னியத்தன்மை குடிகொண்டிருந்தது. அவளது பளபளப்பான சரீரத்திற்கு பொருந்தத்தகாததாக அவளது குரல் அடர்ந்து கனத்திருந்தது. அவளது உடலிலும் பரபரப்பு தொற்றியிருந்தது. விரல்களை உள்ளங்கைக்குள் வைத்து அழுத்தித் தேய்த்துக்கொண்டாள்.



பாலா அவளது விநோதமான கூற்றிற்கு செவி சாய்க்க விருப்பமில்லாதவனைப் போல, எவ்வித மறுமொழியும் கூறாமல், பைக்கை முன் செலுத்துவதிலேயே கவனமாய் இருந்தான். அமுதாவினுடைய உடல் நெளிவு நொடிகளில் கூடிக்கொண்டேப் போனது. சாலை விபத்தில் அடிப்பட்டு இரத்த கறையுடன் மண்ணில் சரியும் நாய்க்குட்டியொன்றின் இறுதி உயிர் துடிப்பைப்போல அவளது உடல் அசைவுகள் தவிப்புக் கொண்டிருந்தது. தன்னை சூழ்ந்திருக்கும் உலகுக் குறித்த அக்கறையற்றவளாய் தன்னிச்சையாக, "பருந்துகள் பருந்துகள்" என உச்சரித்தபடியே இருந்தாள். பாலாவின் தோலின் மீது அவளது கூரிய நகங்கள் அழுந்தப் பதிந்தன.

அமுதாவின் மனதின் சமன் குலைவுக்கு காரணமான அந்த பாலத்தின் மீது பருந்துகள் குவியல் குவியலாக பறந்தலைந்தபடியேதான் இருந்தது. அவை எவ்வித அவசரங்களுமின்றி நிதானமாக றெக்கை விரிய பாலத்தின் மீது மிதந்துகொண்டிருந்தன. ஒரு பார்வைக்கு அவை வானத்தை கிழித்துக்கொண்டு திசை மாறி அங்கு சேர்ந்துவிட்ட வேற்றுலக பிராணிகளைப் போலவும் தோன்றாமல் இல்லை. மறுகணத்தில், அவற்றின் சாம்பல் நிற உடல் மண்ணில் பலகாலமாய் புதையுண்டிருந்துவிட்டு, மீண்டும் உயிர்பெற்று தமது திசைவழி தெரியாமல் கிலிகொண்டு கிறக்கத்தில் அந்த பாலத்தையே வட்டமிட்டிருப்பதைப் போலவும் தோன்றியது.

"சாவினை அறிவிக்கும் வானுலக தூதுவர்கள் அவர்கள்" என்ற அமுதாவினுடைய இரகசிய முணுமுணுப்பு காதில் விழுந்ததும் பாலா பொறுமையிழந்து பைக்கை சாலையின் ஓரமாக ஒதுங்கி நிறுத்தினான். வெயில் கணத்துக்கு கணம் நிலத்தின் மீது சூடேற்றிக் கொண்டிருந்த அன்றைய தினத்தில், அவளை பைக்கில் சுமந்துகொண்டு திரிவதை நினைத்து உள்ளுக்குள் புழுங்கிக்கொண்டான். அவளது மனதினை சமன்படுத்தி, எவ்விதமான விசித்திர பேச்சுகளையும் அவளது நாவிலிருந்து உறிந்தெறிந்துவிட்டு, அங்கிருந்து மிக அமைதியுடன் இயல்பு நிலையில் நகர வேண்டும்போல் இருந்தது.

எக்மோரில் ரயில் பயணச்சீட்டு முன்பதிவு செய்யவே அப்போது அவர்கள் பயணம் செய்து கொண்டிருந்தார்கள். வார இறுதியில் அவனது தங்கை திருச்சி நகரத்தில் புதிதாக குடிபெயரவிருக்கும் வீட்டில் பால் காய்ச்சுகிறார்கள் என்பதால் அங்கு அவன் செல்ல வேண்டியிருந்தது. தங்கைக்கு வாய்த்துவிட்ட ஒற்றை அண்ணன் என்பதால், பாலாவின் இருப்பு அவ்விடத்தில் அவசியமாகிப் போயிருந்தது. ரயில் பயணச் சீட்டு முன் பதிவென்பது அவனது பயணத் திட்டத்தில் முக்கியம் அங்கம் வகிக்கும் காரியமாகும். ஆனால், பாலா தனக்கெதிரில் உதடுகளில் எச்சில் திரண்டு வழிய, பாலத்தின் மீது பார்வை மையமிட்டிருந்த அமுதாவை பார்த்து உள்ளுக்குள் எரிச்சல் அடைந்தான்.

முன்பே பல சமயங்களில், அவளது இத்தகைய நிகழ்வெளிகளுக்கு பொருத்தமில்லாத நடவடிக்கைகளை பாலா எதிர்கொண்டிருக்கிறான். ஒரு நாளில் பூங்காவொன்றில் மாலைவேளையில் இருவரும் அமர்ந்திருக்கையில், முக்கிய நிகழ்வொன்றை தெரியப்படுத்த பிரயாசையோடு பாலா அவளை



நெருங்கி சென்றபோது, மரத்திலிருந்து மெல்ல பொடிப் பொடியாய் உதிர்ந்து விழுந்த இலையொன்றை கையில் எடுத்துக்கொண்டு நீண்ட நேரம் அதனை அவதானித்தவளாய், "முதியப் பெண்ணொருத்தியின் ஈரம் உலர்ந்த கூந்தலில் இருந்து உதிர்ந்த ஒற்றை மயிர்போல இருக்கிறது" என்றாள்.

ஆங்கில இலக்கியத்திலும் பத்திரிகைத் துறையிலும் பட்டம் பெற்றிருந்த அவளது விநோத பேச்சுகள், அவளை அவன் அறிந்துகொண்ட தினத்தில் இருந்தே நேர்ந்தபடியேதான் இருக்கிறது. எனினும் அவள் மீதான விடாப்பிடியான அன்பினால் அவன் அதனை பொருட்படுத்தவில்லை என்பதோடு, அவளை இத்தகைய வினோத கற்பனைகளில் இருந்து மீட்க வேண்டிய பாரத்தையும் சுமக்க வேண்டிய பொறுப்புடன் இருந்தான்.

"அந்த பாலத்துக்கு கீழே கிடப்பது ஒரு இருபது வயது இளைஞனின் உடல்."

அமுதாவின் கண்கள் துடி துடித்தது. முகமும் உடலும் ஒரே திசையில் திரும்புவதும் மீண்டும் பின்திரும்பி பாலாவினுடைய கரங்களை அழுந்த அவளது வலக்கையால் பற்றிக் கொள்வதுமாக இருந்தது. விருவிறுவென இருவரும் அங்குச் சென்று, அந்த பாலத்தின் அடியில் அடர்ந்த கருப்பு நீர் ஓடையில் வெளியே தெரியாமல் அமிழ்ந்திருக்கும் ஒரு இருபது வயது இளைஞனின் உடலை வெளியுலகுக்கு காண்பிக்க வேண்டும் என்பதைப்போல, அவள் பாலாவையும் அப்பக்கமாக பிடித்து இழுத்துக்

கொண்டிருந்தாள்.

பருந்துகள் செய்ய முனைப்புக் கொண்டிருக்கும் காரியத்தில் நாமும் பங்குகொள்ள வேண்டும் என்பது அவளது மனதின் வாதமாக இருக்கிறது என்பதை பாலா புரிந்துகொண்டான். எனினும் அவனுக்கு பைத்தியக்காரத்தனமாக சாலையில் இறங்கி ஓடுவதில் துளியும் விருப்பமில்லை. அவளை வலுவுடன் பிடித்து நிறுத்தினான். அருகில் இருந்த கடையொன்றில் இருந்து தண்ணீர் வாங்கி வந்து கொடுத்து அவளது அதிர்ந்து திரிபுக் கொண்டிருக்கும் மனதை சாந்தப்படுத்த முனைந்தான்.

அமுதா முழு தண்ணீர் பாட்டிலையும் உதட்டை பதித்து உறிஞ்சிக் குடித்தாள். அவளது உடலில் நடுக்கங்கள் குறைந்தபாடில்லை. பாலா அவளிடம் பேச்சுக் கொடுக்க துவங்குகிறான். விரைவாக சென்றால்தான், திருச்சிக்கான பயணச்சீட்டை முன்பதிவு செய்ய முடியுமென உறுதியாக கூறுகிறான்.

அமுதா பேச்சிழந்து அவனது தோலினை பற்றிக்கொண்டு உணர்வுகளற்ற நிலையில் பைக்கில் பின்னமர்ந்துக்கொண்டாள். நீண்ட நேரம் இருவருக்குமிடையில் எவ்வித வார்த்தை பகிர்வுகளும் இல்லையென்றாலும் ஈர மணலில் கசிந்து மேலெழும்பும் நீர் கோடுகளைப்போல அமுதாவினுடைய மிக மெல்லியதான கேவலை அவனால் கேட்க முடிந்தது. எவரோ ஒருவருடைய மரண நிகழ்வு, அதுவும் உண்மையில் அமுதா தெரிவித்திருந்தபடி நிகழ்ந்திருக்கிறதா? அல்லது முழு முற்றாக அவளது பிசகிய மனம் கற்பனையில் நிகழ்த்திய கோரமா? என்று புரியாத நிலையில், அமுதா இப்படி தொடர்ந்து அந்த பாலத்தின் மீதலையும் பருந்துக் கூட்டத்திடம் பிணைப்பு கொண்டிருக்கும் மன சங்கிலியை அறுக்க இயலாமல் தவிப்பது, அவனுக்கு உவப்பானதாக இல்லை.

அவன் அமுதாவிடம் "இன்றைய தினப்பொழுது களில் சாவு நேர்வது ஒன்றும் புதிதானதோ அல்லது புதிரானதோ அல்ல. ஒவ்வொரு மனித உயிரும் மற்றையதை வெற்றிகொள்ளும் வெறியில்தான் ஆழ்ந்திருக்கிறது. வன்மம் இங்கு பெருகியபடியே இருக்கிறது. நெறிகளை மீறுபவர்கள் தினமும் கொலை செய்யப்பட்டபடியேதான் இருக்கிறார்கள். அல்லது நெறியைக் காப்பவர்கள் கொலை செய்யப்படுகிறார்கள். நீ உனது உதிரத்தின் கொதிப்பு நிலையை சமன்படுத்த வேண்டியது மிக அவசியமானது. அந்த பாலத்தின் அடியில், பருந்து குவியல்களின் கண்கள் வட்டமிட்டிருக்கும் நீர் ஓடையில் நீ அவதானித்திருப்பது உயிரற்ற ஒற்றை பிண்டமாக இருக்கலாம். ஆனால், நம் முன்னால் நீளும் இந்த சாலை அதன் மறுகரையைத் தொடுவதற்குள் எத்தனை எத்தனை உயிர்களின் குருதியை சுவைத்துக் கொண்டிருக்கிறது என்றும் புரிந்துகொள். சாலையில் ஒவ்வொரு மனிதனும் சாவு ஒன்றினை விரட்டிச் சென்றபடியிருக்கிறேன். அல்லது சாவு அவனைப் பின்தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறது. கொலை, சாவு, மரணம் துர்மரணம் விபத்து என உயிர் பறிப்புக்கு பல பெயர்களை இட்டு பிறிதொரு மனிதர்களின் மீது குற்றத்தின் பாரத்தை ஏற்றிவிட்டு, வெண்மையும் பாதுகாப்பும் பரிசுத்தமும் நிறைந்திருக்கும் மற்றொரு பாதையில் இறங்கிப் பயணிக்கவே ஒவ்வொரு உயிரும் விருப்பம் கொண்டிருக்கிறது. ஆனால், நிகழ்வதெல்லாம் அப்படியா இருக்கிறது? அமுதா, நேர்ந்திருக்கின்ற அல்லது நேர்ந்துவிட்டதாக நீ கருதுகின்ற சாவு குறித்த எண்ணத்தில் ஆழ்ந்திருக்காதே, பின் அது உன் நிழல்போல பின்தொடர்ந்து வந்துபடியே இருக்கும். சாவிற்காக வருந்துவதல்ல, சாவில் இருந்து தப்பித்துக்கொள்வதே இப்போது நமது தேர்வாக இருக்க வேண்டும்" என்றான்.

அமுதா அவனது பேச்சுகளை உதட்டை சுழித்தபடியே, அசட்டை செய்வதைப்போல, பார்வையை அவனிலிருந்து விலக்கி மீண்டும் அந்த பாலத்தின் திசையிலேயே மேயவிட்டாள்.

"அந்த பாலத்தின் அடியில் கிடப்பது எவனோ ஒருவனுடைய பிணம் அல்ல. மாறாக, அது நான் முன்பொரு காலத்தில் எட்டிமடைசர்வம் மலைத் தொடரின் அடியில் கண்ட தெய்வநாயகியின் மகன். உனக்கு நினைவிருக்கிறதா? தெய்வநாயகியின் மகனுக்கு இப்போது இருபது வயதுதானிருக்கும்."

அமுதாவினுடைய முற்றிலும் நிகழ்கணத்திற்கு பொருத்தமில்லாத பேச்சு, அவனது உள்ளமைதியை மேலும் மேலும் சீண்டியபடியே இருந்தது. பைக்கை இன்னும் வேகமாக முறுக்கி திருகினான். சாலையில் ஒன்றின் மீதொன்று நெருக்கியடித்துக் கொண்டிருந்த வாகனங்களின் இடையில் தென்படுகின்ற சிறுவெளியையும் அவன் விடுவதாக இல்லை. விரைந்து சென்று எக்மோரில் பயணச்சீட்டை வாங்கிக்கொண்டு வீடு போய் சேர வேண்டுமென்று முடிவு செய்தான். எக்மோர் மியூசியத்தின் வளாக சுவரை ஒட்டிய சாலையில் இப்போது அவர்களது பைக் பயணித்துக் கொண்டிருந்தது. எங்கும் புழுக்கம் நிரம்பியிருந்தது.

எட்டிமடைசர்வம் என்கின்ற மலைத் தொடர் குறித்த கதைகளை அமுதா பலமுறை பல்வேறு சந்தர்ப்பங்களில் உடல் நளினத்துடன் பாலாவிடம் விவரித்துக் காண்பித்திருக்கிறாள். என்றாலும் பாலாவுக்கு அவள் சொல்வதில் நம்பிக்கை உண்டாகாமல் இருந்தது. ஸ்தூல வடிவமற்ற அவளது கனவு தளத்தில், புகை புகையாக உருதிரண்ட மலையென்றே அவன் எட்டிமடைசர்வத்தை எண்ணிக் கொண்டிருந்தான்.

புருவங்கள் இரண்டும் விரிந்து நெளிய, பரவசத்துடன் அமுதா சொல்லுவாள்: "கொழுத்த யானையொன்று தனது அலைச்சல் முடித்துக்கொண்ட பின்பு, நிலத்தில் சரிந்து ஆழ்ந்த உறக்கத்தில் திளைத்திருப்பதைப்போல, எட்டிமடை சர்வம் மலைத் தொடர் கரிய நிறத்தில் நிலத்தின் மீது பரந்து விரிந்திருக்க, அதன் ரோமங்கள் காற்றசைவால் சிலிர்த்து புடைத்துக்கொண்டு நிற்பதைப்போல, அந்த மலையகத்தின் மரம் செடி கொடிகளும் பச்சை உருவங்களென எழுந்து நின்று கொண்டிருக்கும்."

அமுதா தெரிவித்திருந்தபடி, எட்டிமடைசர்வம் மலை கோயம்புத்தூரில் இருக்கிறது. தனது எழுத்துப்



பணி ஒன்றிற்காக சில வருடங்களுக்கு முன்பு அவ்விடம் செல்ல வேண்டிய சந்தர்ப்பம் அமுதாவுக்கு உண்டாகியது. இராமாயண கதைப் பாத்திரங்களான இராமன், இலட்சுமணன், அனுமன் முதலானோருக்கு அந்த மலையின் அடிவாரத்தில் சிறு கோவில் ஒன்றினை அங்கிருந்த மக்கள் எழுப்பியிருந்தார்கள் என அவள் கேள்வியுற்றிருந்தாள். கோபுரங்களோ அல்லது சிலைகளோ அல்லாமல், கறுத்த பாறை ஒன்றின் அடியில் சிற்சில கற்களை அருகருகே நெருக்கி நிறுத்தியபடி அவைகளுக்கு அந்த மக்கள் இராமன், இலட்சுமணன் என முறையே பெயரிட்டிருந்தார்கள்.

அந்த கற்களில் அனுமனுக்கு அருகில் இருந்த கல் ஒன்றினை அவர்கள், அனுமனின் துணைவியென்றே வழிப்பட்டு வந்தார்கள். சீதையை மீட்க கிளம்பிய பெரும்படை அவ்வழியாக சென்றதாகவும் அப்போது அங்கிருந்த மலையக மக்கள் அவர்களுக்கு பணிவிடை செய்ததாகவும் அவர்களுக்குள் ஒரு கதை புனைந்து வைத்திருந்தார்கள். அனுமனுக்கு அங்கிருந்த பெண்களில் ஒருத்தியை பிடித்துவிட்டாதாம். அவளது உபசரிப்பில் மனம் லயித்து, அனுமன் அவளையும் தன்னுடன் அழைத்துக்கொண்டு தனது பயணத்தைத் தொடர்ந்தாராம். அமுதா இந்த கதையின் மீது ஈர்க்கப்பட்டிருந்ததோடு, மலையக பயணத்தில் இருக்கும் சாகசத்தையும் அனுபவிக்க வேண்டும் என்ற விருப்பத்தில் அங்கு செல்ல முடிவெடுத்தாள். எட்டிமடைசர்வம் கானகத்திற்குள் அவளது கால்கள் அழுந்த பதிந்து சென்றது இவ்வகையில்தான்.

அவளுக்கு அப்போது கண்ணையன் என்பவர் வழிகாட்டியாக இருந்தார். எட்டிமடைசர்வம் மலைத்தொடரின் ஒற்றைய பாதுகாவலராக அவரே பணி செய்து கொண்டிருந்தார். வனத்துறையினர் அவருக்கு காட்டின் மீது முழு உரிமையை வழங்கியிருந்தனர். எழுபது வயதை தொட்டிருந்த அந்த முதியவர், குறுக்கும் நெடுக்குமாக பின்னிப் பிணைந்துகொண்டு நிற்கும் கிளைகளை முறுக்கி மடக்கி உடைத்தபடி அமுதாவை அழைத்துக்கொண்டு உற்சாகத்துடன் முன்சென்றார்.

வெளிச்சம் அங்கு சன்னமாகவே இருந்தது. எந்த நொடியும் மழை கொட்டிவிடும் என்பதைப்போல மேகங்களில் கருமை கூடியிருந்தது. குளிர் அவளது உடலை தழுவி அணைத்திருந்தது. இருபுறமும் மூங்கில் புதர்கள் மண்டிக்கிடந்தன. அமுதாவுக்கு முகமெல்லாம் வியப்பு. அவள் அங்கு நிலவியிருந்த சிற்றுயிர்களின் கீச்சொலிகளையும் காதில் விழுங்கியபடியே கானகத்தின் புதிர் பாதைகளுக்குள், கண்கள் விரிய கண்ணையனை பின்தொடர்ந்து சென்றாள். வெகு தொலைவில் நகரம் சிறுசிறுப் புள்ளிகளைப்போல அவளது பார்வைக்கு தெரிந்தது.

ஒரு சிறிய மண் தடத்தை அவளிடம் காண்பித்த கண்ணையன், "கொழந்தை, இதுதான்

காலகாலங்களுக்கு முன்பு தமிழகத்தில் இருந்து கேரளாவுக்கு செல்லும் மையச் சாலையாக இருந்தது. பல வன விலங்குகளின் கால்தடம் ஆழ ஊறியிருக்கும் இத்தடத்தின் ஒரு புள்ளியில் திப்புசுல்தானின் கல்வெட்டு ஒன்றும் இருக்கிறது. போர்க்காலங்களில் அவர் இவ்வழியே பயணம் செய்திருக்க வேண்டும். அதன் நினைவாக அந்த கல்வெட்டு அமைக்கப்பட்டிருக்கிறது. ஆய்வுத்துறையினருக்கு வழிகாட்டியாக சென்ற தருணத்தில் அந்த கல்வெட்டினை பார்க்கும் பாக்கியம் எனக்கு கிட்டியது. இதுகுறித்து கூடுதல் விபரம் வேண்டுமானால், நீ கோவை தமிழ் கல்லூரியை அணுகுவது நல்ல பயனை அளிக்கும்" என்றார்.

அமுதா அந்த மண் சாலையை மிரட்சிப் பொங்க பார்வையிடுகிறாள். தொலைதூரத்தில் இராஜ பரிவட்டங்களுடன் மன்னன் குதிரையில் மண் புழுதியை கிளப்பிவிட்டபடி முன்னோடிக் கொண்டிருக்கிறான். அவனைப் பின்தொடர்ந்து படையணியினரும் குதிரைகளில் விரைந்து கொண்டிருக்கின்றனர். பாதையெங்கும் மணல் புழுதி கிளம்பிப் பரவுகிறது. குதிரைகள் பயண களைப்பில் வறண்ட குரலில் கனைக்கின்றன. யானைகளின் பிளிறல் ஓசையையும் அமுதாவால் கேட்க முடிகிறது. இராஜ காலங்களில் மனம் லயித்துப்போய் அமுதா கைகளை முன்னால் நீட்டி அவர்களது பயணத்திற்கு உவகையுடன் விடைகொடுப்பதைப்போல கைகளை அசைத்துக் கொண்டிருந்தாள்.

"கொழந்தை. நான் சொல்லுவது பலபல வருடங்களுக்கு முன்னால் நேர்ந்தது. அப்போது நமது முப்பாட்டன்கள் இந்த நிலத்தில் வாழ்ந்திருப்பார்கள். உன்னுடைய மற்றும் என்னுடைய பிறப்பின் மூலமாக இருக்கும் உயிர் கலப்புக்கூட இன்னமும் நிகழ்ந்திருக்காது (சிரித்துக்கொள்கிறார்). இப்போது உன்னால் யானையின் பிளிறலை கேட்க முடிகிறதென்றால், அது இராஜ காலத்தை சேர்ந்ததில்லை. மாறாக, இராணுவ ஊர்திகள் மலையக சாலைகளுக்குள் ஊடுருவல் புரிந்துவிட்ட நம் காலத்தை சேர்ந்தது. அச்சம் வேண்டாம். யானையால் நமக்கெதுவும் தொந்தரவுகள் ஏற்படாது. அதன் வாழிடங்களில் குடியிருப்புகளை ஏற்படுத்தி அதனது பாதையில் குழப்பம் விளைவிப்பவர்களுக்குத்தான் யானையால் ஆபத்து நேர வாய்ப்பிருக்கிறது. நீ கவலைகொள்ள வேண்டாம்."

கண்ணையன் எட்டிமடைசர்வம் மலைத் தொடரின் முழு பாதைகளையும் தனது உள்ளங்கை ரேகையென அறிந்து வைத்திருந்தான். அவனால் சிறு குழப்பமுமின்றி எளிதாக முன்செல்ல முடிந்தது. கண்ணயனின் நிழல் மெல்ல அங்கிருந்த செடிகொடிகளின் மீது ஏறி தழுவியது. அவனது மேனியில் ஆனந்தம் பூத்துக் குலுங்கியது. அந்த மலையகத்தின் மீது தனக்கு முழு உரிமையும் உண்டென்பதைப்போலச் சாவகாசமாக உலவிக் கொண்டிருந்தான். செடிகொடிகளுக்குள் புகுந்து அவன் முன்னால் ஏறிச் செல்ல, அவை அவனது இருப்பை மூடி தமக்குள் அமிழ்த்திக் கொள்வதைப்போல மீண்டும் முன்னகர்ந்து ஒன்றை ஒன்று பற்றிக்கொண்டு பின்செல்லும் அமுதாவின் பார்வையிலிருந்து அவனை மறைத்தன. அமுதாவிடமிருந்து அவனைத் தற்காத்து, விடுவிப்பதைப்போல அவற்றின் அசைவுகள் இருந்தது. அமுதா அவனது தடத்தை தப்பவிட்டுவிடக்கூடாது என்பதில் கவனத்துடன் இருந்தாள்.

விறுவிறுவென நடந்து சென்று, கறும்பாறையொன்றின் முன்னால் தனது தடையற்ற ஓட்டத்தை நிறுத்திக்கொண்ட கண்ணையன் அங்கு நிலத்தில் சிறிய சிறிய அளவில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த கற்களை அமுதாவிடம் காண்பித்தான்.

"கொழந்தை அதுதான் நீ தேடிவந்த இடம்."

அந்த கற்கள் உண்மையில் இரண்டடி உயரத்தில்தான் இருந்தன. அந்த கற்களின் மீது அடர் பச்சை நிறத்தில் பாசி ஏறி விரிந்திருந்தது. அமுதா அவற்றை தொட்டுத் தடவினாள். கைகளில் பிடித்து வைத்துக்கொள்ளாத வகையில் அந்த கற்கள் வழுவழுப்பாக இருந்தன. பெருவியப்புடன் மலையேறி வந்த அமுதாவின் நம்பிக்கைக்கு மாறாக, எவ்வித பிரமாதமான அம்சங்களையும் கொண்டிருக்காமல் அந்த கற்கள் மிகச் சாதாரணமாக இருந்தன. அவற்றின் மீது மஞ்சளும் குங்குமமும் கொட்டப்பட்டிருந்தது. அமுதா அந்த கற்களை தனது மொபைல் போனில் படம் பிடித்துக்கொண்டாள்.

வெளிச்சம் மெல்ல மங்கி இருள் பரவ ஆரம்பித்திருந்தது. கண்ணையன் அமுதாவை அழைத்துக்கொண்டு விறுவிறுவென மாற்றுப் பாதையில் மலை இறங்கிக்கொண்டிருந்தான். முள் செடிகள் அமுதாவின் உடலின் மீது குத்தி கிழித்தபடியிருந்தன. நிலத்தில் படர்ந்திருந்த வேர்களில் ஒன்றிரண்டு முறை அவளது பாதம் சிக்கி அவளை மண்ணில் சாய்த்தது. அமுதாவுக்கு காயங்கள் பெரிதாக உண்டாகவில்லை. ஒவ்வொருமுறை தடையேற்படும்போதும் அவளது கண்கள் கண்ணையனின் கால்களை இயல்பாக நோட்டமிட துவங்கிவிடும். எழுபது வயதிலும் இந்த மனிதர் எவ்வளவு சுறுசுறுப்புடன் மலையிறங்கிக் கொண்டிருக்கிறார். அமுதாவுக்கு கண்ணையனை ஒரு மனித உயிராகவே அந்த நொடிகளில் உணர முடியவில்லை. மலையகத்தின் காரிருள் வெளிகளில் உலவித் திரியும் வனவிலங்கைப் போலவே அவர் காட்சியளித்தார்.

இருவரும் மலையிறங்கும்போது மாலை ஐந்தரை ஆகிவிட்டிருந்தது. கண்ணையன் அமுதாவிடம் கடைசி கடைசியாக விடைபெறும்போது மிக ரகசியமான குரலில் தெரிவித்தான்: "கொழந்தை, அதோ தார் சாலை தெரிகிறதல்லவா? அதனில் ஏறி நடந்து செல். நகரத்தின் மையச் சாலை அதன் மறுகரையில் இருக்கிறது. கவனமாக இரு. சாலையில் பெண்ணொருத்தி எதிர்ப்படுவாள். தெய்வநாயகி என்பது அவளது பெயர். பார்ப்பதற்கு அவள் பெண்போலவே இருக்க மாட்டாள். மனசு கொஞ்சம் பிசகிவிட்டது. அவள் தனது கணவனையும் மகனையும் தேடி இவ்வூருக்கு வந்தவள். இருவரும் தொலைந்துவிட்ட செய்தி அவளது மனநிலையை

தடுமாறச் செய்துவிட்டது. உனக்கு தெரியுமா அவள் ஏன் இந்த சாலையில் அல்லும்பகலும் வெறிப்பிடித்தாற்போல நின்றிருக்கிறாள் என்று? அவள் அந்த ஊர் எரிந்து சாம்பலாவதை விரும்புகிறாள். புகைப்புகையாக இவ்வூர் எரிந்து அழியும் தினத்தை பார்க்காமல் அவள் அங்கிருந்து நகர மாட்டாளாம்."

அமுதாவுக்கு அவர் சொல்லியது சரிவர புரியவில்லை. சுருங்கிய தோல்கொண்ட கண்ணையனின் முகத்தை கூர்ந்து கவனித்தபடியே, "அவள் ஏன் அவ்வூர் அழிய வேண்டுமென விரும்புகிறாள்?" என கண்கள் விரியக் கேட்டாள்.

"கொழந்தை. அவள் இவ்வூரைச் சேர்ந்தவளில்லை. பல மைல் தொலைவுக்கு அப்பால் இருக்கிறது அவளது குடில். வண்ணாத்தி அவள். அவளது கணவன் சிற்சில வருடங்களுக்கு முன்பு, ஊரிலிருந்து மகனுடன் கிளம்பி வேலைத் தேடி இவ்வூருக்கு வந்திருந்தான். தள்ளுவண்டி கடையொன்றை போட்டு, ஊர் துணிமணிகளை துவைத்துக் கொடுப்பது அவனது வேலையாக இருந்தது. துவக்கத்தில் எல்லாம் நன்றாகத்தான் போய்க் கொண்டிருந்தது. ஆனால், அவனது வருகைக்கு பின்பான காலத்தில், ஒரு நாளில் ஊருக்குள் திருடன் ஒருவன் புகுந்திருந்தான். உடல் முழுக்க எண்ணெய் தேய்த்துக்கொண்டு உலவிய அவன் ஊர் பெண்களின் உடல்களை தழுவுகிறான் என்று சொல்லப்பட்டது. ஊரிலெங்கும் அச்சம் மெல்லப் பரவியிருந்தது. வாரத்தில் ஒருமுறையாவது இந்த நிகழ்வு அரங்கேறாமல் இல்லை. குழப்பமும் ஆபரணங்களை பதுக்கிப் பாதுகாக்க வேண்டிய நிலையும் ஊரில் சூழ்ந்திருந்தது. எங்கும் சச்சரவுகள் தோற்றுவித்திருந்தன. அப்போது அவ்வூர் பெண்ணொருத்தி இரவில் தான் கண்ட உருவம் வண்ணானின் தோற்றத்தோடு ஒத்திருக்கிறது எனத் தெரிவித்து அவனது முகத்தின் முன்பாக விரல் நீட்டி அடையாளம் காட்டினாள். அவ்வளவுதான், ஊர் ஆண்கள் அவனை ஊர் கம்பத்தில் கட்டி வைத்து அடித்துத் துவைத்துவிட்டார்கள். அவனது மறுப்பு அலறல் எதுவும் அவர்களது காதில் விழவில்லை.

பையன் அடிக்கு பயந்து ஓடிவிட்டான் போலிருக்கிறது. அவனிடம்தான் கொள்ளையடித்த மொத்த நகைகளும் இருக்கின்றன என ஊர் மக்கள் நம்பத் துவங்கினர். அதனால் தாக்குதல் தீவிரமடைந்தது. கொழந்தை நீ நம்ப வேண்டும் அவனது கன்னத்து சதை முற்றாக கிழிந்து தொங்கிக் கொண்டிருந்ததை என் கண்ணால் பார்த்தேன். உதடுகள் வெடித்து இரத்தம் பீய்ச்சி அடித்துக் கொண்டிருந்தது. ஊர் மக்களுக்கு அப்போதும் ஆத்திரம் தீர்ந்தபாடில்லை. அடி அடியென அடித்துக்கொண்டே இருந்தார்கள். முடிவில் வண்ணானின் தலை கவிழ்ந்து தொங்கியது. அவனது உயிர் மெல்ல பிரிந்திருந்தது.

ஊரார் துளி குற்றவுணர்வும் இல்லாமல், பறிபோன நகைகளை பற்றிய நினைப்பையும் மறந்து, அவனது சாவினை வெகு விமர்சையாக கொண்டாடி மகிழ்ந்தார்கள். பல நாள் திருடன் ஒருவனை பிடித்து அழித்துவிட்டதாக அவர்கள் தீர்மானத்தில் இருந்தார்கள். ஆனால், இதில் முற்றிலும் முரணான சங்கதி என்ன தெரியுமா? மறு வாரத்திலேயே மீண்டும் வேறொரு குடிலுக்குள் எண்ணெய் தடவிய திருடன் நுழைந்துவிட்டான்."

சொற்கள் குழற கண்ணையன் சொல்லி நிறுத்தியபோது அமுதாவின் மனம் விக்கித்து அதிர்ந்து அடங்கியது. அவளுக்கு பேச்செதுவும் எழவில்லை. தொலைவில் தெரியும் சாலையை முகம் உயர்த்திப் பார்த்தாள். தரையில் வளைந்து ஊர்ந்து செல்லும் கரிய பாம்பைப்போல அது தெரிந்து கொண்டிருந்தது.

"அந்த சாலையில் ஊராரின் பாவம் உறைந்திருக்கிறது என்பதை நினைவில் கொள். எவ்வளவு சொல்லி அழைத்தும் அந்த பெண் ஊருக்குள் நுழைவதில்லை. அவள் அங்கேயே நின்றிருக்கிறாள். அந்த ஊர் ஒருநாளில் வெந்து கருகும் என்பது அவளது நம்பிக்கையாக இருக்கிறது."

கண்ணையனிடமிருந்து விடைபெற்று அமுதா அந்த தார் சாலையில் இறங்கி நடக்கத் துவங்கினாள். மெல்ல இருள் இறங்கி பரவியபடியே இருந்தது. அந்த சாலை மலையின் அடிவாரத்தில் இருந்து நீண்டு நகரத்துக்குள் ஊடுருவி பாய்கிறது. கிட்டதட்ட மலையின் நாக்குபோல தெரிந்தது அந்த சாலை. அமுதா சுற்றுமுற்றும் தலை திருப்பி பார்வையிட்டாள். மனித நடமாட்டத்திற்குத் துளியும் சந்தர்ப்பம் இல்லாமல் இருந்தது அச்சாலை. இருபுறமும் வீடுகள் எதுவும் இல்லாமல், நிலம் ஆழ்ந்த மௌனத்தில் உறைந்திருந்தது.

அமுதா ஒவ்வொரு அடியாக விரைந்து முன்னோடியபடியே இருந்தாள். அவளது மனம் தெய்வநாயகியை கண்டுவிடக்கூடாது எனும் நினைப்பில் ஆழ்ந்திருந்தது. அந்த அடர் இருட்டு கவிந்திருக்கும் பொழுதில் தெய்வநாயகியை காண்பது அத்தனை சரியான காரியமாக இருக்காது என்று நினைத்திருந்தாள். கண்ணையன் சொல்லிய கதை அவளது செவிகளில் ஒலித்தபடியே இருந்தது. அமுதா நடை வேகத்தை கூட்டினாள். தொலைவில் அரையுங் குறையுமாக தென்பட்ட ஊரின் முதல் வீட்டின் மீதே அவளது கவனம் முழுமையாக நிலைகொண்டிருந்தது. அவள் நடந்துகொண்டே இருந்தாள். அமுதாவுக்கு மனதில் நம்பிக்கை கீற்றுகள் மின்னின. ஊர் சாலையை அடைந்துவிட்டால் பிறகு பயம்கொள்ள வேண்டிய அவசியமில்லை என நம்பினாள்.

ஆனால், விதி முன் தீர்மானித்துவிட்ட சம்பவ அடுக்குகளை ஒரு எளிய உயிர் தனது புத்தி சாதூர்யத்தால் மட்டுமே கலைத்துவிட முடியாதல்லவா? அக்கணத்தில் மின்னல் ஒன்று வானத்தில் வெளிச்சிட்டு மின்னி மறைந்தது. ஒருகணம் முழு ஊரும் பொலிவுடன் துலங்கி மீண்டும் இருளுக்குள் புகுந்துகொண்டது. அமுதா ஊர் சாலையை நெருங்க சில அடி தூரமே எஞ்சியிருந்த நிலையில், கரிய நிழல் எழுந்து சாலையில் குறுக்காக நிற்பதைப்போல, கருத்த உரு பிண்டமென அமுதாவின் பார்வைக்கு தெய்வநாயகி புலனாகிறாள். அவளது மயிர்கள் காற்றில் அலைப் பரப்பியபடி இருந்தது. சீலையொன்றைச் சுற்றியிருந்தாலும் அவளது உடல்

சதைகள் வெளியே தெரிந்து கொண்டிருந்தது. ஆதி மரமொன்றினைப்போல அசைவுகளற்று நின்றிருந்த தெய்வநாயகி மெல்ல தலைத் திருப்பி அமுதாவை பார்த்தாள். ஊராருக்கும் தனக்குமிடையில் நிழல் கோட்டினைப்போல நின்றிருந்த தெய்வநாயகியின் பார்வையை கண்டபொழுது அமுதாவுக்கு இருதய துடிப்பு இருமடங்கானது. அவள் தனது மார்பின் மீது கைவைத்து தன்னை அமைதிப்படுத்த முயன்றாள். நிகழ் காலத்திற்கு பொருத்தமில்லாமல், மண்ணுக்கடியில் நிறைவேறாத லட்சியங்களுடன் புதையுண்டிருக்கும் மூதாதையர்களின் வெறுமை நிரம்பிய ஞாபக பிரதிபோல அவள் தோற்றம் கொண்டிருந்தாள். அவளது கண்கள் கூர்மையுடன் அமுதாவை நோக்கின.

அமுதாவுக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. அவளது கைக் கால்கள் முன்னெழ இயலாமல் துவண்டு அசைய மறுத்தன. அமுதா தெய்வநாயகியிடம் மன்னிப்பு கோரும் விதமாக, பரிவுடன் கண்களை சுருக்கி மூடிக்கொண்டாள். அவளது உடல் நரம்புகள் புடைத்துக்கொண்டு நின்றன. அமுதா மெல்ல சாலையின் மீதிருந்த கால்களை அசைக்கத் துவங்கினாள். மனது அவளை சிறுக சிறுக முன்னால் உந்திக் கொண்டிருந்தது. இறுக மூடிய கண்களை திறக்காமல் மெல்ல அடிமேல் அடிவைத்து நகர்ந்தபடியே இருந்தாள். நிதானமாக அமுதா இப்போது ஊரின் கரையைத் தொட்டிருந்தாள். அவளது இருதய துடிப்பு மெல்ல தாழ்ந்து சீரானது. அத்தனையும் ஒருசில நொடிகளில் விரைந்து கடந்தன.

தெரு விளக்கின் வெளிச்சத்தில் நனைந்துவிட்ட பின்பு, தெய்வநாயகியின் உருத் தோற்றத்தை நிச்சயத்துக்கொள்ளும் குறுகுறுப்பில் தலையை பின் திருப்பிப் பார்வையிட்டாள். இருளுக்குள் தெய்வநாயகியின் உருவம் கரைந்து போயிருந்தது. அமுதாவுக்கு எதுவும் தென்படவில்லை. நிதானத்துடன் அந்த இருள் பரப்பினுள் கண்களை மேயவிட்டாள். தொலைவில் அவளது பார்வைக்கு இரண்டு மின்மினிப்பூச்சிகள் மட்டுமே தென்பட்டன. மெல்ல அவை அந்த இருள்வெளியில் இருந்து வெளிச்சம் நோக்கி முன்னேறி வந்தன. அமுதா அந்த மின்மினிகளைக் கண்ணுற்றபடியே நின்றிருந்தாள். நெருங்கி வந்த மின்மினிகள் இப்போது இரண்டு கண்களாக உருமாற்றம் கொண்டிருந்தன. அவற்றின் கீழே இரத்தம் வற்றிய உலர்ந்த சதை தென்பட்டது. நெற்றியும் தலைகேசமும் ஒன்றன் பின் ஒன்றாக தெளிவுர புலப்பட, அமுதாவின் முக நெருக்கத்திற்கு அருகே வந்திருந்த தெய்வநாயகி ஓங்கி உரக்க, “ஏய்ஞ்..” என்று குரலெழுப்பினாள்.

அமுதா அக்கணத்தில் கற்சிலைப் போலாகிவிட்டாள். அவளது கண்கள் இரண்டும் வெறித்தபடி இருந்தன. கால்கள் மரத்துப்போயிருந்தன. கைகளை இறுக்கமாக மூடிக்கொண்டாள். உடல் மயிர்கள் விடைத்துக்கொண்டெழுந்தன. “ஏய்” என்ற தெய்வநாயகியின் குரல் அவளை ஓங்கி அறைந்திருந்தது. அமுதா சிற்சில நொடிகள் அப்படியே அசைவுகளற்று நின்றிருந்ததன் பின்பாக, உறைவு தளர்ந்து நிதானமுற்றாள். வெகு தொலைவில் இரண்டு மின்மினிகள் இருள் வெளியில் அரூப தடமொன்றை வரைந்து மின்னிக் கொண்டிருந்தன.

அதற்கு அடுத்த ஒரு வார காலத்திற்கு அவளுக்கு உடல்நிலை சரியில்லாமல் ஆகிவிட்டிருந்தது. நினைவு கூர இயலாத நிலையில் படுக்கையில் வீழ்ந்து கிடந்தாள். தேறி வருவதற்கே அவளுக்கு சில தினங்கள் ஆகியிருந்தது.

பாலாவிடம் இக்கதையை அமுதா பலமுறை தெரிவித்திருக்கிறாள். தெய்வநாயகியையும் கொலை செய்யப்பட்ட அவளது கணவனையும் தொலைந்துவிட்ட அவளது மகனையும் நினைத்து பலமுறை பாலாவின் தோளின் மீது சாய்ந்து விசும்பியிருக்கிறாள். பாலா இக்கதையை முழுதாக நம்பவும் இல்லை. முற்றாக கற்பனையென ஒதுக்கிவிடவும் இல்லை. அவன் அந்த நினைப்புகளிலிருந்து அமுதாவை மீட்டுவிடப் பலவாறாக முயற்சித்திருக்கிறான். புதுப்புது நிலவொளிகளுக்கு அவளை அழைத்துச் சென்றிருக்கிறான். அவனது வற்புறுத்தலின் காரணமாக, அவள் பத்திரிகையாளர் பணியையும் துறந்துவிட்டிருந்தாள்.

பாலாவுக்கு அமுதா சொல்லிய கதையை மெய்யென்று நம்ப, தனது சிறுவயதில் நிகழ்ந்த சம்பவமொன்றை நினைவில் கிளர்த்திவிட்டு, அதனை பதிலீடாக நிறுத்தி ஆறுதல் அடைந்து கொண்டிருந்தான்.

சிறுவயதில் அவனுக்கு சாவு வீடு ஒன்றிற்கு செல்லும் சந்தர்ப்பம் உண்டாகிறது. ஊதுபத்தி புகையும் ரோஜா இதழ்களின் மணமும் அவனது நாசிகளில் அவ்வயதிலேயே புகுந்துக்கொண்டன. குவிந்து கதறும் ஊர் பெண்களின் ஓலங்களை அவன் தனக்குள் சேகரம் செய்துகொண்டான். தன் முன்னால் மரணமுற்றுக் கிடக்கும் பிணத்தின் முகமும் அவனது மனதில் ஆழப் பதிந்திருந்தது. பின் காலங்களில், சாவு குறித்த எண்ணம் எழும்போதெல்லாம் அந்த முகமே அவனுக்கு முதலில் தோன்றுவதாய் இருந்தது. ஆனால், சில வருடங்களைக் கழித்து, அவன் தனது பருவ காலத்தை எட்டியிருந்த நிலையில் மிக தற்செயலாக, அத்தனை ஆண்டு காலமும் அவன் பிணமென்று கருதியிருந்த பெண்ணை மீண்டும் சந்திக்கும் சந்தர்ப்பம் அவனுக்கு நேர்கிறது.

வயதான கோலத்தில் தனது மகளின் பிரசவ தினத்தில் உடனிருக்க வேண்டி அவள் மீண்டும் ஊருக்கு வந்திருந்தாள். பாலாவுக்கு மிகுந்த குழப்பம் மனதில் ஏறிக்கொண்டது. தனது தாயிடத்தில் விசாரிக்கையில், “அந்தப் பெண் ஒருபோதும் மரணமடையவில்லை. நீ சிறுவயதில் பார்த்தது, அவளது தங்கையின் சாவினை” என தெரிவித்தாள். சாவிற்கு அருகில் அமர்ந்திருந்தவளின் முகம் சாவினை நினைவுபடுத்தும் முகமாக அவனது நினைவில் இத்தனை ஆண்டு காலமும் உறைந்து தேங்கியிருந்திருக்கிறது.

அமுதா சொல்லும் கதையும்கூட இதுபோல பாதி நிகழ்ந்ததாகவும் மீதி கற்பனையில் கிளைத்ததாகவும்



இருக்கலாம் என நினைத்து தன்னை சமாதானம் செய்துகொண்டான் பாலா. ஆனால், அவள் மீண்டும் மீண்டும் சந்தர்ப்பம் வாய்க்கும்போதெல்லாம் அதே எட்டிமடைசர்வம் காடுகளைப் பற்றி பிதற்றிக் அழுவது அவனுக்கு எரிச்சலாகவே இருந்தது. மெல்ல மெல்ல அவன் அவளது கதைகளை கூர்ந்து நோக்கும் எண்ணத்தைக் கலைத்துவிட்டான். அவளது கதைகளை முற்றிலும் புறக்கணிக்க முடிவு செய்திருந்தான். ஆனால், இன்னமும் அவள் எட்டிமடைசர்வம் மலைத் தொடரில் இருந்து மனதளவில் கீழிறங்கியிருக்கவில்லை.

ரயில் பயணச்சீட்டினை வாங்கிவிட்டு, அமுதாவை அவளது வீட்டின் வாசலில் இறக்கிவிடும்போது அவள் சொன்னாள்: "நாளைய செய்தித்தாளில் அந்த பாலம் வருகிறதா இல்லையா என்று பார்." பாலா அவளது பேச்சினை ஆமோதித்துத் தலையசைத்துவிட்டு தனது வீடு நோக்கி திரும்பினான். வழியெங்கும் அவளது அன்றைய விநோத நடவடிக்கைகளே அவனது எண்ணத்தில் படித்திருந்தது.

வீடு திரும்புகையில், இருட்ட துவங்கியிருந்தது. இரவில் அவன் சாலையில் பயணித்துக் கொண்டிருக்கும்போது, அவனுக்கு எதிரில் முழுக்க முழுக்க கரும் பரப்பில் ஒளிகள் பந்துகளைப்போல மிதந்து கொண்டிருப்பது அவனுக்குப் புலனாகியது. வாகனங்களில் பின் விளக்குகள் சிவப்பு நிறத்திலும் எதிர்புறத்தில் வருகின்ற வாகனங்களில் முன் விளக்குகள் மஞ்சள் நிறத்திலும் பிரகாசமாக ஒளி சிதறலை தோற்றுவித்திருந்தன. பாலாவுக்கு கண்கள் கூசியது. பெரும்பாலும் அவன் இத்தனை பிரக்ஞையுடன் தனக்கு முன்னால் தழைத்திருக்கும் வெளிச்சப் புள்ளிகளை கண்கொடுத்துப் பார்க்க மாட்டான். ஆனால், இன்றைய தினத்தில் அவனது மனம் முழுக்க முழுக்க பாலத்தின் மீது அலைந்து கொண்டிருந்த பருந்துகளின் மீதும் தெய்வநாயகியின் நிழலைப் பற்றிக்கொண்டு தொங்கியபடியிருந்த அமுதாவின் மீதும் மையமிட்டிருந்தது.

அவனால் தனக்கெதிரில் விரையும் வாகனங்களைத் தெளிவுடன் பார்க்க முடியவில்லை. சாலையில் பயணித்துக் கொண்டிருக்கிறோம் என்ற உணர்வு அருகிப் போயிருந்தது. அனைத்தும் ஒளி உருவங்களாக மட்டுமே அவனுக்கு முன் தோன்றியிருந்தன. வாகனங்களின் ஒலி அதிர்வுகள் அரூப உச்சாடனங்களைப்போல கிறக்கத்தில் ஆழ்த்தும் வகையில் ஓலமிட்டுக் கொண்டிருந்தன.

பாலா சாலையற்ற சாலையொன்றில் ஒளிப் பந்துகளுக்குள் புகுந்து பயணம் செய்துகொண்டிருந்தான். ஒவ்வொரு ஒளிப் பந்தும் மற்றையதுடன் ஒன்றிக் கலந்து, மிகப் பெரிய இரண்டே இரண்டு பெரும் ஒளிப் புள்ளிகளாக மாற்றம் கொண்டன. திடீரென அந்த ஒளிப் பந்துகள் மின்மினிகளாக உருமாற்றம் பெற்றன. மின்மினிகள் பாலாவை நோக்கி வேகமெடுத்து பறந்து நெருங்கின.

கண நேரத்தில் அந்த மின்மினிகள் இரட்டை கண்களாக மாறி, முதிய பெண்ணொருத்தியின் முகத்தின் ஒரு அங்கமாக அடைக்களம் புகுந்திருந்தது. தெய்வநாயகி அவன் முன்னால் நின்றிருந்தாள். அவளது கண்களில் கண்ணீர் கோடுகள் உருண்டு விழுந்தன. "ஏய்ஞ்." என்ற ஆங்காரத்துடன் குரலெழுப்புகிறாள். பாலாவின் உடல் விறைத்துக்கொண்டு நிற்க, தனது படுக்கையில் இருந்து திடுக்கிட்டு அலறிப் புடைத்துக்கொண்டு எழுந்தான் பாலா.

பொழுது விடிந்திருந்தது. வெளிச்சம் மெல்ல அவனது அறை சன்னலின் வழியே உள்ளே புகுந்திருந்தது. மெல்ல நிதானத்துடன் எழுந்து கதவை திறந்து வாசலை பார்த்தான். எவ்வித வித்தியாசங்களும் இல்லாமல் முழு இயல்புடன் நகரம் புலனாகியது. முகத்தை கழுவிக்கொண்டு, சட்டை ஒன்றை அணிந்தபடி டீக்கடையை நோக்கி நடந்தான். அவனது மனதில் அமுதா முந்தைய இரவில் தெரிவித்திருந்த, "செய்தித்தாளினை பார். அந்த பாலம் பற்றிய செய்தி வெளியாகியிருக்கும்" எனும் குரல் ஒலித்தபடியே இருந்தது.

"மாஸ்டர் ஒரு டீ" என்று சொல்லிவிட்டு, உள்ளிருந்த நாற்காலி ஏறி அமர்ந்தான். அவனுக்கு முன்னால் அன்றைய செய்தித்தாள்கள் விரவிக் கிடந்தன. ஒருவித விருப்பமின்மையுடனும் அலட்சிய தொனியிலும் செய்தித்தாளினை பிரித்துப் பார்த்தான். ஒவ்வொரு பக்கமாக தாள்களை புரட்டியபடியே இருந்தான். அமுதா குறிப்பிட்டதைப்போல, அந்த பாலத்தின் அடியில் பிணம் மீட்பு எனும் செய்தி எதுவும் வெளியாகியிருக்கவில்லை. பாலா தனக்குள்ளாக புன்னகைத்துக் கொண்டான். அதற்குள் அவனுக்கான டீ தயாராகி, அவன் முன்னால் வைக்கப்பட்டது. மெல்ல ஒரு கையால் டீயை உறிஞ்சியபடியே, மறுகையால் செய்தித்தாளை புரட்டிக் கொண்டிருந்தான்.

முழுமையாக செய்தித்தாளை புரட்டியும் எதுவும் பிடிபடாததால், மெல்ல அதனை மூடி வைத்துவிட்டு, அமுதாவின் எண்ணத்தில் ஆழ்ந்தான். எத்தனை பரிசுத்தமான உயிர் அவள். அவளுக்கு இத்தகைய மன வியாதி தோற்றுவித்திருக்கிறதே என அவள் மீது பரிவு பெருகிறது. கூடுதல் கவனத்துடன் அவளைப் பார்த்துக்கொள்ள வேண்டுமென அவனுக்கு எண்ணம் எழுந்தருளியது. மௌனத்தில் டீயை உறிஞ்சியபடியே இருந்தான். அவனது முழு கவனத்திலும் அமுதாவின் முகமே நிலைப்பெற்றிருந்தது.

அப்போது திடீரென விந்தையான உணர்வு அவனுக்குள் அரும்பியது. ஒருவித அசூசையான உணர்வால் அவன் ஆட்கொள்ளப்பட்டான். கவனித்திருக்க வேண்டிய ஏதோவொன்றை இத்தனை அலட்சியமாக அவனது பார்வையிலிருந்து நழுவி விலகி ஓடியிருக்கிறது என்ற எண்ணம் மனதை அழுத்தியது. தலையில் இருபுறமும் அதற்குள் வியர்வைக் கோடுகள் உருண்டு விழுந்தன. அவனுக்குப் புரையேறியது. வலக்கையால் தலையை தட்டிக்கொண்டான். அவனது மூளை பரபரப்புடன் எதையோ அவனது மனதுள் புகுந்து தேடியபடியே இருந்தது. நிதானமிழந்து மீண்டும் அவசர அவசரமாகச் செய்தித்தாளினை விரித்துப் பார்த்தான். ஒவ்வொரு பக்கத்தையும் அவசரத்துடன் கசக்கிய நிலையில் கடந்தான். நான்காவது பக்கத்தின் கொட்டை எழுத்தில் அந்த செய்தி அச்சாகியிருந்தது.

"கோவை எட்டிமடைசர்வம் வனப்பகுதியில் தீ விபத்து. அந்த மலையை ஒட்டியிருந்த கிராமத்தில் பல உயிர்கள் கருகி உயிரிழந்தன. தீயணைப்பு படையினர் உடல்களை மீட்கும் பணியில் ஈடுபட்டு வருகிறார்கள். உறவினர்கள் கதறியழும் காட்சி மனதை குமைகிறது. காட்டுப் பகுதியில் உண்டான தீ மெல்ல பரவி ஊர் வரை நீண்டிருக்கிறது. பாதிக்கப்பட்ட மக்களில் ஒருவரான தெய்வநாயகி தீ விபத்து குறித்து தெரிவிக்கையில், "என்னுடைய மகனும் கணவனும் தீயில் கருகிவிட்டார்கள் (அழுகிறார்). இனி எனக்கு வாழ்ந்தென்ன கேடு? (அழுகிறார்). பல உயிர்கள் தீயில் கருகிவிட்டது. ஒரு உயிரின் மதிப்பு தெரியுமா உங்களுக்கு? (அழுகிறார்). எத்தனை எத்தனை நம்பிக்கையை ஒவ்வொரு உயிரும் அவர்களது குடும்பத்தில் ஏற்படுத்தியிருக்கிறது? எத்தனை எத்தனை கனவுகளை விதைத்திருக்கிறது? எத்தனை எத்தனை இன்ப துன்பங்களை பகிர்ந்திருக்கிறது? ஒரு உயிரின் மதிப்பு தெரியுமா உங்களுக்கு?(அழுகிறார்). இதோ எனது மகனும் கணவனும் தீயில் கருகிவிட்டார்கள். அவர்களை மீட்டுக்கொடுக்க முடியுமா உங்களால்?" என்று பெருங்குரலெடுத்து அழுதபடியே தெரிவித்தார்."

பாலாவுக்கு ஒருகணம் உச்சந்தலை முதல் உள்ளங்கால் முதல் அதிர்ந்து குலுங்கியது. அவனால் அந்த செய்தியை நம்ப முடியவில்லை. எப்படி அதனை முதல் முறை புரட்டும்போது அத்தனை அசட்டையாக இருந்துவிட்டோம் என நினைத்து உடல் வெடவெடுக்க மீண்டும் மீண்டும் அந்த செய்தியை படித்துக்கொண்டே இருந்தான். அவனது விரல்கள் தெய்வநாயகி எனும் பெயரையே அழுந்தத் தொட்டிருந்தன. விக்கித்து வெதும்பிய மனதை கட்டுப்படுத்தியபடியே, விரல்கள் நடுநடுங்க அமுதாவுக்கு போன் செய்தான். மறுமுனையில் அவளது குரல் எவ்வித சுரத்தும் இல்லாமல் விருப்பமற்ற குரலில் ஒலித்தது. பாலா அவசர அவசரமாக தான் சற்றே முன்பு செய்தித்தாளில் கண்ட செய்தியை அமுதாவிடம் பகிர்ந்துகொண்டான். உடனடியாக அவளது குரலில் உற்சாகம் குடியேறிக்கொண்டது. தனது அத்தனை தன்னிலை பேச்சுகளுக்கும் ஒரு உருவம் கிடைத்துவிட்டதைப்போல அவள் வாஞ்சையுடன் அந்த தகவலை மீண்டுமொருமுறை பாலாவை வாசிக்கச் சொல்லி கேட்டாள். அவளது மனம் பெருமையில் தளும்பியது. மிக தெளிவாகவும் நேரமெடுத்தும் அமுதா உறுதியான குரலில் பாலாவிடம் சொன்னாள்: "நான் புனைந்து வைத்திருக்கும் எட்டிமடைசர்வம் எனும் கற்பனை கதையின் முடிவும் இப்படியாகத்தான் இருக்க வேண்டுமென ஆசை கொண்டிருந்தேன்." ●

ராம் முரளி <raammurali@gmail.com>

# சேவையுளம்

பொ.கருணாகரமூர்த்தி



வழுக்கைத் தலையுடன், அசப்பில் மாறுகண் இல்லாத காக்கா ராதாகிருஷ்ணனைப்போல ஒரு தோற்றம். எழுபதை அண்மித்த அம்முதியவர் லண்டன் வந்திருந்தபோது IBC தொலைக்காட்சி அவரைப்பேட்டி கண்டது. அவரின் புருவங்கள் நரைத்திருந்தன. இன்னும் நெற்றியில் ஆரம்பித்துப் பின்மேவிய திகம்பர வெளியின் பின் எல்லையோடு சிறுநிரையில் உருமறைப்பின்றிச் பதுங்கியிருந்த சிற்றணி முடியினரும் பஞ்சென நரைத்துவிட்டிருந்தனர்.

“திருக்குறள் உலகிலேயே ஈடு இணையற்ற ஒரு அற்புதமான நூல். அதன் அருமை பெருமைகளைத் தமிழர்களாகிய நாங்களே சரிவரப் புரியாமல் இன்னமும் இருக்கிறோம். அதிலே இல்லாத வாழ்வியல் செய்திகளே இல்லை. அவ்வரிய நூலை எம் குழந்தைகள் புரியும்படி எளியமொழியில் எழுதி சிறிய புத்தகங்களாக அழகான படங்களுடன் அச்சிட்டு தமிழர்கள் புலம்பெயர்ந்து வசிக்கும் நாட்டிலெல்லாம் குழந்தைகளிடம் விநியோகிக்க வேண்டும். எம் தமிழர்கள் முன்னேயுள்ள முதலான பணி அதுதான்” என்று வெகுவாக ஆதங்கப்பட்டார். இடையிடையே கல்லாமை அதிகாரத்திலிருந்து சிலகுறள்களை எடுத்து விசிறி அவற்றுக்குப் பதவுரையும் விளக்கவுரையும் பகர்ந்தார்.



இன்னும், “தமிழர்கள் அந்நியதேசங்களில் அரும்பாடுபட்டு உழைக்கும் செல்வத்தை சிக்கனமாக வாழ்வதன் மூலம் சேமித்து, அதை ஒருங்குவித்து பெரிய பெரிய வியாபாரக் குழுமங்களை, தொழில் நிறுவனங்களை எல்லாம் ஸ்தாபிக்க வேண்டும். அப்போதுதான் நம்மவர்களுக்கு உலகளாவிய ரீதியில் ஒரு ‘ப்ரக்யாதி’ கிடைக்கும்” என்றார்.

“உலகம் முழுவதும் பரவலாகத் தெரியக்கூடிய மாதிரி இந்தியாவிலும் அமெரிக்காவிலும் சிங்கையிலும் தமிழ் பிஸினெஸ் மக்னெட்ஸ் உருவாகிக் கொண்டிருப்பது உலகப் பெருமைவாய்ந்த விஷயமல்லவா” என்றும் பெருமைப்பட்டார்.

பேட்டிகண்ட எம்.என்.எம். அனஸூம் அவரது ஸ்ருதிக்கு இசைவாகத் தன் கேள்விகளைத் தொடுத்துக் கொண்டிருந்தார். எனக்கோ, “இந்த ஆசாமியை முன்பும் எங்கேயோ பார்த்திருக்கிறேன். ஆனால், எங்கேயென்றுதான் நினைவுபடுத்த” முடியாதிருந்தது.

திடீரென அவர் பெயர் வீரப்பன் என்றும் சிங்கப்பூர் தொழில் முனைவாளர் என்றும் தொலைக்காட்சித் திரையில் தோன்றவும், திடுப்பென ஒரு மின்னலின் சிறு கற்றை பாய்ந்து என் ஞாபகப்புலத்தில் ஒரு ஜோதிப்

பிழம்பு பொலிந்தது.

'ஓஹோ, இப் பெம்மானை, 25 ஆண்டுகளுக்கு முன்பதாக நான் சிங்கை சென்றவிடத்து நானாகப் போய்ச் சந்தித்திருக்கிறேன். அப்போதும் வழுக்கை இப்போதும் வழுக்கை. அது நீங்கலாக முகத்தில் இப்போது இன்னும் கொஞ்சம் முதிர்ச்சி தெரிந்தது. அவரைப்போய் என்னைச் சந்திக்க உந்தியவர் சுஜாதா அவர்கள். அவரைச் சந்திக்க நேர்ந்த காரணம் சுவாரசியமானது. 90 களில் சிங்கை சென்று வந்த சுஜாதா 'கணையாழி' பத்திரிகையில் தன் கடைசிப் பக்கங்களில் சிங்கையில் தான் சந்தித்த இந்த வீராவைப் பற்றியும் ஒரு பத்தி எழுதினார்.

சிங்கையில் செராங்கூன் சாலையில் வீரமாகாளி அம்மன் கோவிலுக்குச் சமீபமாக அச்சாலைக்குச் சமாந்தரமாக அமைந்த Upper Dickson சாலையில் TAMIL BOOKS EVS எனும் ஒரேயொரு புத்தக அங்காடியில் தமிழ்நூல்கள் கிடைப்பதாகவும் அதுவும் அங்கே பக்தி நூல்களும், தேவார திருவாசகங்களும், பஞ்சாங்கங்களும், ஆங்கில மூலநூல்களிலிருந்து திருடி எழுதப்பட்ட 'ஒரே ஆண்டில் கோடீசுவரராவது எப்படி?', 'ஆறே மாதத்தில் அறிஞராவது எப்படி?' என்பது போன்ற சுயமுன்னேற்ற நூல்களும், ராணிமுத்து, உதயதாரகை, வண்ணத்திரை, மாலைமதி, பொம்மை, ராணி போன்ற தமிழ் சினிமாச் சஞ்சிகைகளும், மணிமேகலை பிரசுரங்களும், நாஞ்சில் பி.டி.சாமி, ராஜேஷ்குமார், பட்டுக்கோட்டை பிரபாகர், ரமணிச்சந்திரன் வகையறா பாக்கெட் நாவல்களும், கிரகதோஷநிவர்த்தியன்ன ஜோதிடநூல்களும், தமிழ் படிக்கும் குழந்தைகளுக்கான அரிச்சுவடிகளும், (அதிஷ்டலக்ஷ்மி for அ, ஐங்கரன் for ஐ) மழலையர் நிலைக்கான சில ஆரம்ப நூல்களும், எழுது பொருள்களுமே அந்த ஈழவர் கடையில் கிடைப்பதாக எழுதியிருந்தார். சுஜாதா போய் அந்த ஈழவரிடம் கையை நீட்டிக்கொண்டு, "ஐ ஆம் சுஜாதா" என்றாராம். அந்தப்பெயரையே அதுவரையில் கேள்விப்பட்டிராத வீரா சுதாகரித்து, "Which சுஜாதா" எனவும், இவர், "Writer சுஜாதா" என்றிருக்கிறார். "Sorry, I have not heard such a name." என்றாராம். புதுமைப்பித்தனோ பாலகுமாரனோ போய்த்தம்மை அவரிடம் அறிமுகப்படுத்தி இருந்தாலும் வீரப்பன் இதே விதத்தில்தான் வரவேற்றிருப்பார். அப்படி அமைந்தது அவர்கள் சந்திப்பு.

இருந்தும் சிங்கையில் தமிழ்நூல்களை விற்கும் அவர் முயற்சியைப் பாராட்டியவர், "நீங்கள் ஏன் தரமான தமிழ்நாவல்களையும் சிறுகதைத் தொகுப்புகளையும் சிங்கப்பூர் தமிழ் வாசகர்களுக்கு அறிமுகஞ் செய்யப்படாது?" என்று கேட்டதுக்கு, "எனக்கு விருப்பந்தான் சாரே, 500 வெள்ளி செலவுசெய்து அவற்றை இறக்குமதி செய்துவைத்தால் அவை முழுவதும் விற்பனையாக நாலைந்து ஆண்டுகளாகும். போட்டமுதல் வட்டியுமில்லாமல் கிடந்து புண்ணாகும். தமிழ்ப் புத்தகங்களில் முதலைப்போடுவது Absolute Waste" என்றாராம் வீரப்பன்.

நான் கடைக்குள் நுழைந்ததுவும் என்னை அமர்க்களமாக வரவேற்றார். சில விநாடிப் பேச்சிலேயே நான் இலங்கையன் என்பதைக் கண்டுகொண்டார். என்ன நூல்கள் இருக்கின்றன என்று மேலோட்டமாக மேய்ந்ததில் என் ரசனைக்கேற்ப எதுவும் அங்கே இருக்கவில்லை. சில ஆங்கில செவ்விலக்கியங்கள் இருந்தன. அனைத்துக்கும் இரட்டிப்புவிலை வைத்திருந்தார் வீரா.

'தமிழில் வெறெதுவும் இல்லையா' என்றதுக்கு கடையின்




பின்பக்கத்திலிருந்த ஒரு தூசிபடிந்த சிறிய அறைக்குள் என்னைக் கூட்டிச்சென்றார். அங்கே பழுப்பேறிய சில பழைய நூல்கள் பக்கேஸ் பெட்டிக்குள்ளும் நிலத்திலுமாகக் குவித்து வைக்கப் பட்டிருந்தன.

தூசு அதிகம் கிளம்பிவிடாதபடி குவியலைப் பிரித்துப் பார்த்தபோது தனிப்பாடல் திரட்டுகளும், மணிவாசகர் பதிப்பகம் வெளியிட்ட சிலநூல்களும், மதுரைக்காஞ்சியும், கல்கியின் கள்வனின் காதலியும், மு.வரதராசனின் கரித்துண்டும், விட்டல்ராவின் ஒரு நாவலும், காண்டேகரின் மனோரஞ்சிதமும், நந்தா என்றொரு தடிமனான நாவலும் (ஆசிரியர் பெயரை நினைவுபடுத்த முடியவில்லை) வெளிப்பட்டன. அக்குவியலில் குளவிமட்டும் கூடுகட்டியிருக்கவில்லை, நூல்களைக் கட்டுவதற்கு பயன்பட்டிருக்கக்கூடிய கோந்தைச் சாப்பிட்டு வாழ்ந்துகொண்டிருந்த Silverfish பூச்சிகளின் அமைதி உறக்கத்தை நான் கெடுத்ததால் அவைவெளிப்பட்டு என்னைச் சபித்துக்கொண்டு வெளிப்பட்டு நாலாதிசையிலும் திரிந்தன.

"ஏன் இப்படி?" என்றதுக்கு, அங்கே ஒரு கல்லூரியில் நூல்களின் கண்காட்சி ஒன்று நடைபெற்றதாகவும், அதற்குத் தான் அவற்றை எடுத்துப்போனதாகவும், அங்கே விற்பனையானவற்றின் மீதி இவை என்றும் 'ஒரு தனிக் கதை' சொன்னார்.

உடுப்புக் கசங்கினாலும் பரவாயில்லையென்று ஒருகாலைத்தரையில்




குத்தவைத்து அமர்ந்துகொண்டு குவியலின் அடியில் புகுந்து கிளறியதில் பளுப்பு மஞ்சளில் தடித்த அட்டையுடனான மாயூரம் வேதநாயகம் பிள்ளை அவர்கள் எழுதிய 'பிரதாப முதலியார் சரித்திரம்' பிரதி ஒன்று வெளிப்பட்டது. அந்நூலைக் கவனமாகப் பிரித்துப்பார்த்தால் அதுவெளிவந்த ஆண்டு 1935 என்றும், நூலின் உட்பக்கப்பக்க மூலை ஒன்றில் பென்சிலால் 1.50 வெள்ளிகள் என்றும் எழுதப்பட்டிருக்கவும் "ஆ" என்று அலறிவிட்டேன். (அப்போது ஒரு வெள்ளிக்கு நிகர்த்த இலங்கை ரூபாய்கள் 18.00 மாத்திரமே).

என் அலறலைக்கேட்ட வீரப்பன், "என்ன என்ன அந்த நூல் என்ன" என்று என்னிடம் விசாரித்தார். அதுவரை அவரது நாணயத்தைச் சந்தேகிக்காத நான் வெள்ளந்தியாக, "அந்நாவல்தான் உரைநடையில் அமைந்த முதலாவது தமிழ் நாவல் என்பதையும், அது ஒரு Rare book என்பதையும் அதுவும் 1935 இல் பதிக்கப்பட்ட அந்நூல் அருமையிலும் அருமை என்றும் அதன் விருத்தாந்தத்தை உளறி அதை வாங்கப்போவதாகவும்" சொன்னேன்.

அந்நூலை உடனே என்னிடமிருந்து வாங்கியவர் ஓணானைப்போலத் தலையாட்டித் தன் மூக்குக் கண்ணாடியின் வில்லைகளுக்கூடாகவும், வில்லைக்கு மேலாகவும் அதன் விலையைப் பார்த்தார். பின், "ஆனால், தம்பி அது ஒண்ணரை வெள்ளியல்ல, 15 வெள்ளிகள்" என்றார்.

"இல்லை, ஒண்ணரை வெள்ளீன்னுதான் அதில் போட்டிருக்கே" என்றேன்.

"இல்லேம்பி, நாந்தான் எக்ஷிபிஷனுக்கு எடுத்துப் போனேன்னு சொன்னேனே. அங்கேதான் யாரோ பசங்க விலையை மாற்றிப்போட்டுட்டாங்க. அது 15 வெள்ளிதான்" என்று அடம்பிடித்தார்.

"பதினைஞ்சு வெள்ளீன்னா எனக்கு வேணாம்" என்றேன். வியாபாரம் முறிவதை விரும்பாதவர், "சரி, நீரும் எங்கவூர்க்காரராய் இருக்கிறீர். நடுவால போவோம். 8 வெள்ளி" என்றார்.

15 வெள்ளி என்றாலுந்தான் எனக்குப் பொருட்டே யில்லை. அவர் என் தலையில் மிளகாய் அரைக்க நினைப்பதுதான் எரிச்சலூட்டியது.

வீரப்பன் இத்தனை பொய் சொல்லும்போது நான் ஒரு பொய் சொல்லக்கூடாதா? செம்மொழிக்காவலர் கருணாநிதியே இதுபோன்ற அரிய நூல்களைப் பதிப்பித்து வெளியிட அவரது ஆட்சிக்காலத்தில் எதுவித முயற்சியும் செய்யவில்லை எனும் ஆதங்கமும் கோபமும் எனக்குள் இருந்தது.

"வேணாங்க எம்.ஜி.ஆர். பிரதாப முதலியார் சரித்திரத்தை கிளாசிக் பதிப்பாக கெட்டியான அட்டைகளோடு அழகாக வெளியிட்டிருக்கிறார். நான் அதில ஒரு காப்பி சென்னையில வாங்கிக்கறேன்" என்றொரு வண்டிலை விடவும், "சரி 5 வெள்ளி தந்திட்டு எடுத்துப்போங்க" என்றார். எடுத்து வந்தேன்.

அவர் கணையாழியைக் கண்ணாலும் கண்டிருக்க மாட்டார் என்று தெரிந்தும் புறப்படும்போது அவரிடம், "சுஜாதா உங்களைப் பத்தியும் உங்க கடையைப் பத்தியும் ரொம்ப உயர்வாய் 'கணையாழி' பத்திரிகையில எழுதியிருக்காரே படிசீங்களா" என்றேன்.

"என்னான்னு எழுதியிருக்காரு?" என்றார் கண்ணாடியின் வில்லைகளுக்கு மேலால் பார்த்து.

"சிங்கையிலேயே இலாப நஷ்டம் பாராது தமிழ்ப் புத்தகங்களை விற்பனை செய்யும் சேவையும் மொழிப்பற்றும் மிக்க மறவர் திரு.வீரப்பன் எனும் ஈழவர்" என்று ஒரேயடியாகப் புகழ்ந்திருக்காரே" என்றேன்.

அவருக்கு 'கணையாழி' என்றது புரியவில்லை. 'ராணி'யைப் போலொரு பத்திரிகை என்று நினைத்திருப்பார்போல. "அப்படிப்போகும்போது தெருவிலகண்டால் அந்தப் பத்திரிகை ஒண்ணு வாங்கிக் கொடுத்திடறீங்களா தம்பி" என்றார்.

அது ராஜீவ்காந்தி கொலை வழக்கு பரபரப்பாக விசாரிக்கப் பட்டுக் கொண்டிருந்த நேரம். முகத்தில் கடுப்புடன், "அவருக்கென்ன எழுதிட்டுப் போயிடுவாரு. இவன் இலங்கையன்னு, அதுவும் தெரிஞ்சிட்டா இனி யாரும் நம்ப கடைப்பக்கம் வரமாட்டான்" என்ற வீரப்பன் இப்போது பொய்யாமை அதிகாரத்தில் வரும்,

மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு
தானஞ்செய் வாரின் தலை.

எனும் குறளைத் தொலைக்காட்சியில், "ஒருவன் தனது மனத்தோடு பொருந்திய வாய்மையினைச் சொல்லுவானானால், அவனே தானமும் தவமும் ஒருங்கே செய்பவரைவிட மேலானவனாவான்" என்று அலசிக்காயப் போட்டுக்கொண்டிருந்தார். ●

பொ. கருணாகரமூர்த்தி <karunah08@yahoo.com>

# ஷங்கர்ராமசுப்ரமணியன் கவிதைகள்

1

நீலமிருது

பறக்கும் ரயிலிலிருந்து
கலைவாணர் அரங்கத்தின்
வாகன நிறுத்தத்தில்
இரண்டு புதியரகக் கார்களுக்கு நடுவே
கடல் நீல நிறத்து
அம்பாசிடர் காரைப்
பார்த்தேன்.
வானை முட்டும் கட்டிடங்களுக்கு நடுவே
மிகவும் ஆழம்
மிகவும் தூரம்
மிகவும் ஏகாந்தம்
மிகவும் அமைதி
அந்த நீல நிற அம்பாசிடர் கார்.
என் அம்மாவின்
திருமணப் பட்டுச்சேலையில்
பின்னொரு நாள்
உறங்கியபோது
உணர்ந்த மிருது
வெள்ளிப் பரல்கள் மின்னி மறையும்
இளங்காலை வெயிலில்
ஒற்றை ஜோடியாய்
அவள் கைபிடித்து
கடல் நோக்கி நடந்த நாளில்
பாதமெங்கும் படர்ந்த மிருது.



2

இலவ மரம்
கிளி
பரஸ்பரம் பரஸ்பரம்
நினைவில் இல்லாத
கதை.
இலைகளுக்கும் மரத்துக்கும்
பச்சை மேல்
மேலும்
இச்சையை அளித்து
சுற்றி சுற்றிப் பறந்தன
கிளிகள்.

3

தாய்ப்பாலுடன் சேர்ந்து
பருப்பு சோறு
சாப்பிடத் தொடங்கும் போது
குழந்தைகளுக்கு
பூனை மீசை வளர்கிறது
பூனைகளுக்கும்
எனக்கும் மட்டுமே தெரியும்
மீசை அது
அம்மாவின் ரத்தம் குடித்து
வளர்ந்த மீசையாக்கும்
என்று ரகசியமாய்
தெரிவித்து
வாயைச்
சப்புக்கொட்டுகிறது
குழந்தை.



4

புழக்கடையில்
என்ன சத்தம் என்கிறாள்
காக்காய் கரைகிறது
என்றேன்
வித்தியாசமாக இருப்பதாகச் சொன்னாள்
அப்படியாவென்று கேட்டு
அடுப்பங்கரைப் பால்கனிக்குப் போய்
நானும் சேர்ந்து கரைந்தேன்
ஆமாம்
அவள் சொன்னது சரிதான்
எங்கள் கரைதலுக்கு உள்ளே
மியாவ்
மிஞ்..யாஞ்..வ்
மிஞ்ஞ்ஞ்.யாஞ்ஞ்ஞ்.வ்
இருக்கிறது.

5

உனது கடைசிப் பூனைக் கவிதையை
எப்போது எழுதப் போகிறாய்?
இப்படி ஒரு குரல் கேட்டது
விழித்தேன்
முதலில் பயந்து
பின்னர் தளர்ந்து சிரித்தேன்
கடைசிப் பூனையைப் பார்த்த பிறகு
போதுமா என்று
பதிலைச் சொல்லி
புரண்டு கொண்டேன்.

6

முகத்தை உற்றுப் பார்
பூனையிலிருந்து
மிகத்தொலைவில்
அடர்ந்த இருளுக்குள்
உள்ளது
புலி
புலியின் முகவாட்டம்
குலைந்த ஜியோமிதி
அதில் தெரியும் மடத்தனம்
குழந்தைமை
நிர்வாண வேட்டை
பூனையில் இல்லவே இல்லை. ●

ஷங்கர்ராமசுப்ரமணியன் <shankarashankara@gmail.com>

# பேத்தியின் ஓவியம்

வைதீஸ்வரன்

விடிந்தவுடன் நான் எப்போதும் என் பேத்தியைத்தான் தேடுவேன். அவள் படுக்கையை விட்டு எழாமல் தூக்கமும் விழிப்புமாக தனக்குள் பேசிக் கொண்டிருப்பாள். கனவின் மிச்சத்தை ஏதோ கதையைப் போல் சொல்லிக்கொண்டு சிரித்துக் கொண்டிருப்பாள். அதை நானும் கேட்க வேண்டுமென்று எனக்கு ஆவலாக இருக்கும். அவள் கதைகளில் சில சமயம் மகாபாரத கடோத்கஜனும் டைனசோரும் சண்டை போட்டுக் கொண்டிருப்பார்கள். ஆஞ்சனேயரும் மிக்கி மௌஸும் ஓடிப் பிடித்து விளையாடிக் கொண்டிருப்பார்கள் .

"எப்படி கண்ணு, உனக்கு கனாவிலே இப்படியெல்லாம் வருது?" என்று கேட்பேன்.

அவள் கண்ணை சிமிட்டிக்கொண்டு, "இல்லே தாத்தா, இதுலே பாதி கனா, பாதி புருடா!" என்று கண்ணை சிமிட்டிக்கொண்டு பலமாக சிரித்தவாறு படுக்கையிலிருந்து குதிப்பாள்.

இன்று அவள் படுக்கையில் காணவில்லை. வீட்டின் பின்புறம் தோட்டத்துக்கு போகும் கதவுக்கருகில் இருந்த வாசற்படிகளில் உட்கார்ந்து கொண்டு உன்னிப்பாக தலையைக் கவிழ்த்துக்கொண்டு ஒரு வெள்ளைக் காகிதத்தில் என்னவோ கிறுக்கிக் கொண்டிருந்தாள்.



நான் அருகில் சென்று என்னவென்று பார்த்தேன். வெள்ளைக் காகிதம் முழுவதும் கருப்புக்கலர் பென்சிலால் மேலும் கீழுமாகக் கிறுக்கிக் கொண்டிருந்தாள். அடிக்கடி முன்னே விழும் தலை மயிரை ஒதுக்கி விட்டுக்கொண்டே கிறுக்கிக் கொண்டிருந்தாள்.

"கண்ணூ, என்ன பண்றே? காயிதம் பூரா, ஒரே கிறுக்கலா இருக்கே?" என்று கேட்டேன்.

அவள் கூந்தலை ஒதுக்கிக்கொண்டு தலை தூக்கி என்னை பார்த்து, "டிராயிங்க் வரையரேன் தாத்தா!" என்றாள்.

"டிராயிங்கா! இதுவா டிராயிங்க்! என்ன சொல்றே நீ?" என்றேன்.

"ஆமாம் தாத்தா, இது டிராயிங்க்தான். இது என்னோட HAIR டிராய்ங்க்!" என்று சொல்லிவிட்டு பலமாக சிரித்தாள்.

அதை தமிழில் சொன்னால் ஒரு வேளை கொச்சையாக இருக்கும் என்று நினைத்தாளோ!

அவள் சொன்ன பதிலை என்னால் மறுக்க முடியவில்லை.

'இதைப் போய் டிராய்ங்க வரையணுமா?' என்று இயல்பாக எழுந்த கேள்வியை நான் அடக்கிக்கொண்டேன்.

பெரிய ஓவியர்கள் இப்படி ஏதாவது வரைந்திருந்தால் இந்தக் கேள்வியை நான் கேட்க முடியுமா? என்ற சிந்தனை எழுந்தது.

சில கலைஞர்கள் 'fucks' என்று சொல்லி என்னை ஈனமாக பார்த்திருப்பார்கள். "ஏன் இது உன் கண்ணைக் குத்துதா?" என்று கேட்டிருப்பார்கள்.

இந்தக் குழந்தைக்கு அப்படிக் கேட்கத் தெரியாது. ஆனால், தன் சுதந்திரத்தை ஏன் தாத்தாவால் பாராட்ட முடியவில்லை என்று அதன் உள்மனத்தில் ஏதோ உறுத்தல் நேர்ந்திருக்கலாம்.

நவீன ஓவிய வளர்ச்சியில் 'Dadaism' என்று ஒரு வகை போன நூற்றாண்டின் ஆரம்பத்தில் சில ஆண்டுகள் அதிர்ச்சிகரமான சுதந்திரத்தை பிரகடனம் செய்தது. கலைகளில் உன்னதம், சாதாரணம் என்று எதுவுமே கிடையாது. தனி மனித சுதந்திரத்துடன் இந்த உலகத்தை, வாழ்க்கையை எந்தவித யதார்த்த ஒழுக்கத்துக்கும் கட்டுப்படாமல் விடுதலையாக வெளிப் படுத்துவதுதான் இந்தக் குழுவின் நோக்கமாக இருந்தது.

மலத்தைக்கூட மனம் விரும்பினால் ஓவியமாக வரையலாம்!

அறுபதுகளில் நான் சில மாதங்கள் மும்பையில் இருந்தேன் (அப்போது அது பம்பாய்). அங்கே அப்போது Progressive Artist Association என்ற பெயரில் மிக முற்போக்கான ஓவியக் குழு ஒன்று செயல்பட்டுக் கொண்டிருந்தது. பிற்காலத்தில் மிக முக்கியமான நவீன ஓவியக் கலைஞர்கள் அப்போது இளைஞர்களாக ஓவியம் வரைந்து கொண்டிருந்தார்கள். நானும் K.K. Hebbar அவர்களின் சிபார்சு மூலம் ஒன்றிரண்டு ஓவிய வகுப்புகளுக்குப் போயிருக்கிறேன்!

அப்போது அவர்கள் ஓவியக் கண்காட்சி நடத்தினார்கள். அதில் ஒரு ஓவியம் எல்லோர் கவனத்தையும் கவர்ந்தது. கவர்ந்தது என்பதை விட மிகவும் உறுத்தியது என்று சொல்ல வேண்டும்.

அது ஒரு பெரிய படமாக மாட்டப்பட்டிருந்தது. ஆனால், அதில் படம் எதுவும் இல்லை!





கேன்வாஸின் குறுக்கே கத்தியால் நறுக்கென்று கீறி விடப் பட்டிருந்தது. அவ்வளவுதான் படம். அந்தப் படத்தை வரைந்தவர் அல்லது கீறியவர் பெயர் K. H. Ara. அப்போது ஓரளவு பிரபலமான நவீன ஓவியர்.

நான் அதிர்ச்சியுடன் அதைப் பார்த்து அருகில் இருந்த நண்பரிடம், "இது என்ன?" என்று கேட்டேன். "உனக்கு என்ன தோன்றுகிறதோ, அதுதான்!" என்றார்.

"எனக்கு எதுவும் தோன்றவில்லையே! ஆனால், மிகவும் வேதனையாக இருக்கிறது. ஒரு நல்ல கேன்வாஸை ஏன் இப்படிக் கிழிக்க வேண்டும். மனதைக் கீறிய மாதிரி இருக்கிறது" என்றேன்.

"அதுதான் இது. Heart of an Artist" (ஓவியனின் சோகம்) என்றான்.

'Heart of That Artiste' (அந்த ஓவியனின் சோகம்) என்று மனதுக்குள் சொல்லிக்கொண்டேன்.

அவசரமாக நகர்ந்து போய் அந்தக் கண்காட்சிக் கூடத்தின் இன்னொரு பகுதியில் மாட்டியிருந்த பால் கொகானின் தஹிதி ஓவியங்களைப் பார்க்க சென்றேன். அவை பிரதி எடுக்கப் பட்ட ஓவியங்கள் தான். இருந்தாலும் மிக நேர்த்தியான பிரதிகள்.

தஹிதியின் பழங்குடி மக்களின் இயற்கையோடு இயைந்த அதீதமான வாழ்க்கை, அதில் உன்னதமான அழகுடன் கனவுலகம் போல் சித்தரிக்கப் பட்டிருந்தது.

மனித வாழ்க்கையின் சந்தோஷத்துக்காக என்று எண்ணிக்கொண்டு நாம் இன்று உற்பத்தி செய்து கொண்டிருக்கும் அநேக சாதனங்கள் நமக்குத் தேவையே இல்லாதவை. மிகவும் அற்பமானவை என்று தோன்ற வைக்கும் அந்தப் படம் என்னை நெகிழச் செய்தது.

நான் வெகு நேரம் பார்த்துக் கொண்டிருந்தேன். அப்போது பால் கோகினை நினைத்துக்கொண்டேன்.

இந்தப் படங்களை அவர் வரைந்து கொண்டிருந்த போது அவனுக்கு கைகளில் விரல்களே குறைந்து போய் வளைந்து போயிருந்தது. கைகளில் துணி கட்டிக் கொண்டு வரைந்து கொண்டிருந்தான்!!!!

அந்தக் கலைஞனின் தனிப்பட்ட வேதனையை அந்தப் படங்கள் பிரதிபலிக்கவே இல்லை!! That Was The Heart Of A Great Artiste (ஒரு மகா கலிஞனின் மனம் அந்த ஓவியம்). ●

**வைதீஸ்வரன்** < vydheesw@yahoo.com>

# தேவதேவன் கவிதைகள்

## 15. உன் எண்ண ஓட்டத்தை நான் அறிகிறேன்

தாழ்மைக்கும் வியப்பிற்கும் அப்பால்
உடல் பம்மியவாறு நீ அமர்ந்திருக்கத்
தேவையே இல்லை, இளைஞனே,
உன் எண்ண ஓட்டத்தை நான் அறிகிறேன்

என்னுடைய வயது எழுபது
உன்னுடையது இருபத்தி அய்ந்து
உனக்கு முப்பத்து அய்ந்து ஆண்டு தூரம் நான்.
எனக்கு நீ அப்படி அல்ல;
தூரமேயில்லை.
அவ்வளவு நெருக்கம்.
நீயும் நானும்
வேறு வேறல்ல என்னுமளவுக்கு.
எப்படியெனில்
நான் காலத்தில் வாழ்பவனில்லை
காலமற்ற பெரும்பொழுதுகளிலெல்லாம்
நானே இல்லை.
நீயும் காலத்தின் உருவாக்கங்களையெல்லாம்
விட்டுவிடுவாயெனில்
கிடைக்கும் உனக்கும்
யாண்டும் உயிர்கள் அனுபவிக்கலாகும்
அழகிய உலகம்
அழகிய கவிதை!



## 16. மனவெழுச்சி

ஆழ்ந்து விரிந்து பரந்த கடலும்
வானிலிருந்து வந்த பெருமை
சிறிதுமின்றி
அடக்கமான சிற்றுயிர்களாய்
வந்தமர்ந்த ஏரிகளும் குளங்களும்
தங்கள் நோக்கம் நிறைவேறிவிட்ட
அமைதியில் அமர்ந்துவிட்டனவா?
கடல் இப்படி அலைவீசத் தொடங்கிவிட்டதும்
ஏரிகளும் குளங்களும்கூட
சிற்றலைகள் வீசிக் கரைமோதுகிறதும் ஏன்?
தாங்கள் அடைந்ததை
அனைவரும் அடையவில்லையே என்ற தாபமோ?

ஓடும் ஆறும்
வெள்ளப் பெருக்கும்
தாம் நோக்கம் கொண்டிருப்பதை
கிஞ்சித்தும் அய்யுறமுடியாதபடி
உரத்துக் கூறிக்கொண்டிருப்பதை -
ஓங்கிஓங்கி
ஓயாது ஒலித்தபடி
பள்ளத்தை நோக்கியே
பாய்ந்து கொண்டிருப்பதை -
அடையவேண்டிய இலட்சியங்களை
யாண்டும் உரத்து ஒலித்துக்கொண்டேயிருப்பதையும்தான்
என்னென்பது? ●



Published by Prabhu Thilaak, No. 5 - 5th Street, Somasundaram Avenue, Shakthi Nagar, Porur, Chennai - 600 116;
Printed by A. Chandran on behalf of AMRUDHA, Ayyanar Offset, No. 10 Subbarao Nagar, Choolaimedu, Chennai - 600 094;
Owner and Editor: Prabhu Thilaak